


லக்ஷ்மி அளிக்கும்
உங்கள் அழகான
தோற்றத்திற்கு ஏற்ற மாற்றம்

வாழ்விலே ஒரு புதிய தோற்றம். மகிழ்ச்சியான ஒரு மாற்றம்.
நாள்முழுவதும் உங்கள் எழிலுக்கு அழகூட்டும், மனமகிழ்வூட்டும்,
கச்சிதமாக பொருந்தும், லக்ஷ்மியின் 50%- 50% பாலியெஸ்டர், பருத்தி.
100% பாலியெஸ்டர் பிளவுஸ் துணிகள்.
கவர்ச்சியான வண்ணங்கள்.
நாகரீக மங்கையரின் விருப்பம்.

இதோ ஒரு
மாற்றம்



லக்ஷ்மி மில்ஸ்
கோயமுத்தூர்.

DDA/LM / 003

கேள்வி: நாடாளுமன்றத்தில் மிகக் குறைந்த உறுப்பினர்களைப் பெற்றுள்ள சந்திரசேகர் அணிக்கு இ. காங்கிரஸ் ஆதரவு அளித்து ஆட்சியில் அமர்த்தியிருப்பது எவ்விதத்தில் நியாயமாகும்?

**வாழப்பாடி ராமமூர்த்தி பதில்:** வி. பி. சிங் அரசுக்கு பா. ஜ. க. தனது ஆதரவை வாபஸ் பெற்ற உடனேயே வி.பி. சிங் தவிர வேறு யார் தலைமைப் பொறுப்பை ஏற்றாலும் ஜனதா தளத்தை ஆதரிப்போம் என்று எங்கள் கருத்தைத் தெரிவித்தோம். அதைத்தான் செய்து காட்டியிருக்கிறோம். நாட்டில் தேர்தல் நடத்தும் சூழ்நிலை தற்போது இல்லை. தெளிவாகச் சொன்னால் தேர்தலை ஒத்திப் போடுவதற்கான இடைக்கால ஏற்பாடாகத்தான் சந்திரசேகர் குழுவை நாங்கள் ஆதரிக்கிறோம். சந்திரசேகர் குழுவினரின் ஆதரவைப் பெற்று, நாங்கள் ஆட்சி அமைத்திருக்கலாமே என்று சொல்கிறார்கள். ஆனால், ஜனதா தளத்தை உடைத்தவர்கள் எதற்காக



# “கலைஞர் அரசு கலைக்கப்பட வேண்டும்”

— வாழப்பாடி கூறுகிறார்

அதை உடைத்தார்கள் என்பது மக்களுக்குத் தெரியாததல்ல. இந்த நிலையில் நாங்கள் அரசு அமைத்தால் எங்களை அவர்கள் தொடர்ந்து ஆதரிப்பார்கள் என்பது என்ன நிச்சயம்? மக்களைச் சந்தித்து அறுதிப் பெரும்பான்மை பெற்றே நாங்கள் மீண்டும் ஆட்சி ஏற விரும்புகிறோம்.

கேள்வி: மத்தியில் ஆட்சி மாறியதால் தமிழகத்திலுள்ள கலைஞர் அரசு டிஸ்மிஸ் செய்யப்படும் என்ற வதந்திவெல்லாம் பரவுகிறது. நீங்களும் அடிக்கடி கலைஞர் ஆட்சி கலைக்கப்பட வேண்டும் என்கிறீர்கள். தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள மெஜாரிட்டி அரசைக் கவிழ்ப்பது முறையாகுமா?

வாழப்பாடி: வி. பி. சிங் அரசு இருக்கும் போதே, கலைஞர் அரசு 'போக வேண்டிய அரசு' என்று சொல்லி வந்திருக்கிறேன். அதற்குப் பல காரணங்கள் இருந்தாலும் முக்கியமான மூன்று காரணங்களைச் சொல்கிறேன். வெளிநாட்டிலிருந்து. குறிப்பாக ஈழத்திலிருந்து விடுதலைப் புலிகள் எப்போது வேண்டுமானாலும் தமிழகத்திற்குள் வந்து கொலைகள் செய்யவும் கொள்ளையடிக்கவும் மாநில அரசு அனுமதித்துள்ளது. ராமனாதபுரம், தஞ்சை கடற்கரைப் பகுதிகள், ஆயுதச் சந்தையாக மாற்றப்பட்டிருக்கின்றன. அடுத்ததாக ஜனநாயக உணர்வுகள் நசுக்கப்பட்டு இங்கு தேர்தல் என்பதே கேலிக்கூத்தாக மாறி இருக்கிறது. சமீபத்தில் நடைபெற்ற கூட்டுறவுச் சங்கத் தேர்தல்களில் கழக கண்மணிகளின் கைவரிசை ஏராளம். எதிர்க்கட்சி ஆட்களை மனுதாக்கல் செய்ய விடாமல் தடுத்தது — அதையும் மீறி மனுதாக்கல் செய்து விட்டால் அற்பக் காரணங்களுக்காக அந்த மனுக்களைத் தள்ளுபடி செய்வது — எல்லாவற்றையும் சமாளித்துத் தேர்தலில் போட்டியிட்டால், முடிவுகளை அறிவிப்பதில் கோல்மால்... கள்ள வாக்கு... என்று எதிராளியை ஜனநாயக விரோதமாகத் தோற்கடித்தார்கள். இவற்றை எதிர்ப்பவர்களின் குரல்

வளையை நெரிக்க எல்லா முயற்சிகளும் செய்யப்படுகின்றன. என் மீது எட்டு வழக்குகள் போடப்பட்டுள்ளன. செய்தி நிறுவனங்களான யு. என். ஐ., பி.டி.ஐ. ஆகியன மிரட்டப்பட்டுள்ளன. தினமலர், இந்தியன் எக்ஸ்பிரஸ், போன்ற பத்திரிகைகளுக்குப் பாதுகாப்புக் கிடையாது. கோவை ராமகிருஷ்ணன் என்பவர் ஆயுதங்கள் தயாரித்ததாகக் கைதானவர். இவர் முதல்வருக்கு வேண்டியவராகி விட்டார். சாத்வீக முறையில், மலிவு விலை மதுக் கடைகள் முன் மறியலில் ஈடுபட்ட தியாகிகள் வழக்குப் பதிவு செய்யப்பட்டுப் பதினைந்து நாட்கள் உள்ளே தள்ளப்பட்டு இருக்கிறார்கள். கருணாநிதி நிலை தடுமாறிப் போய் விட்டாரே என்று வருத்தமாக இருக்கிறது. போதாக்குறைக்கு அத்தியாவசியப் பொருள்களில் தட்டுப்பாடு. மெய்யான மண்ணெண்ணெய் தட்டுப்பாடு என்றால் எங்கேயும் கிடைக்கக் கூடாது. வெளிச்சந்தையில் அதிக விலைக்குக் கிடைக்கும்போது ரேஷனில் கிடைக்காததற்குக் காரணம் விநியோகத்தில் இருக்கும் ஊழல்தான். ஊழலின் பின்னால் இருக்கும் தி. மு. க. தான்.

கேள்வி: உங்களைப் பொறுத்தவரை பரபரப்புக்காக ஏதேனும் குற்றச்சாட்டுக்களைக் கூறி விட்டு விளம்பரத்தைப் பெறுகிறீர்கள் என்று மக்கள் நினைக்கிறார்கள். குற்றச்சாட்டை நிரூபிக்கும் வழக்கம் உங்களிடம் இல்லையே!

வாழப்பாடி: நாங்கள் எதிர்க்கட்சியில் இருக்கிறோம். எங்களுக்கு மிக அரிதாகத்தான் " தகவல்கள் கிடைக்கும். அப்படி கிடைக்கும் தகவல்களைப் பத்திரிகைகள் மூலம் மக்களுக்குச் சொல்கிறோம். நாங்கள் சொல்லும் குற்றச்சாட்டுக்கள் உண்மையா இல்லையா என்று கண்டுபிடிக்கும் பொறுப்பும் வாய்ப்பும் அரசுக்குத்தான் உள்ளது. விளம்பரத்துக்காக நான் எதையும் சொல்வதில்லை.

கேள்வி: சமீபத்தில் ஐ. ஏ. எஸ். அதிகாரிகள் பற்றிய ஊழல் புகார் ஃபைல்கள் எரிக்கப்பட்டன என்றீர்கள். வழக்கறிஞர் சுப்பிரமணியம் கேஸ் பதிவு செய்யப்படவில்லை என்றீர்கள். எல்லாவற்றையும் அரசு ஆதாரம் காட்டி மறுத்து விட்டதே?

வாழப்பாடி: நான் இரண்டு அதிகாரிகள் என்றேனே! ஒரு அதிகாரி பற்றிய தகவலைத்தானே அரசு இப்போது தந்திருக்கிறது. மற்றொரு அதிகாரி யார்? இது தவிர, ஓர் அதிகாரி நாற்பத்தைந்து நாட்கள் உலகம் சுற்ற டிக்கெட்டுகள் வாங்கி மூன்று முறை கேன்ஸல் செய்தார் என்று சொன்னேன். அது யார் என்று அரசு சொல்லவேயில்லையே. அவர் முறைப்படி அரசு அனுமதி பெற்றாரா? பயண ஏற்பாடுகளைச் செய்தது யார்? இது பற்றியும் வழக்குப் போடட்டும். சந்திக்கத் தயாராக இருக்கிறேன்.

பேட்டி: **ப்ரியன்.**

---



# காதல் என்பது என்ன!

சினிமாவில் பார்த்தால், மலைச்சரிவில் டூயட் பாடி ஆடுவதுதான் காதலோ என்று தோன்றும். சில கதாசிரியர்களின் நாவல்களைப் படித்தால் காமம்தான் காதல் என்ற முடிவுக்கு வர நேரும். எது காதல்? அதன் மெய்யான வெளிப்பாடு எத்தகையது? யோசித்து எழுதப்படும் சிறந்த ஒரு பக்கக் கட்டுரைக்குப் பரிசு ரூ. 50. தவிர, பிரசுரமாகும் சிந்தனைச் சிதறல்களுக்கும் சன்மானம். கல்லூரி முகவரி குறிப்பிட்டு எழுதக் கடைசித் தேதி: 8.12.90.

நினைவூட்டுகிறோம்: அதிகபட்ச முதல் பரிசு பெற்ற மாணவருக்குப் பொன் விழா மேடையில் சிறப்புப் பரிசு ரூ. 2500/-

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**




**கல்லூரி மாணவர் கட்டுரைப் போட்டி**



* ஐ. என். எஸ். விராட்...

# இந்தியக் கடற் படையின் ஹீரோ!



* கப்பல் தளத்திலிருந்து பறக்கும் ஸீஹேரியர் விமானம்...

நம்மிடம் எத்தனையோ வகைப் போர்க் கப்பல்கள் இருந்தாலும் கடந்த 71—ம் ஆண்டு நடந்த பாகிஸ்தான் யுத்தத்தில், நமது கடற்படையின் ஹீரோவாக விளங்கியது ஐ. என். எஸ். விக்ரந்த். இப்போதைய ஹீரோவோ ஐ. என். எஸ். விராட் என்னும் விமானந் தாங்கிக் கப்பல் தான்.

இந்தக் கப்பலை நாம் தேர்ந்தெடுத்ததற்கு என்ன காரணம்?

கடந்த 82—ல் பாக்லந்தை அர்ஜன்டைனா கைவசப்படுத்தியதைத் தொடர்ந்து, அதை மீட்பதற்காகப் பிரிட்டிஷ் கடற்படையை அனுப்பினார் மார்கரெட் தாட்சர். அதற்குத் தலைமை தாங்கிச் சென்ற கப்பல் 'ஹெரச். எம். எஸ். ஹெர்மிஸ்' என்ற விமானந்தாங்கிக் கப்பல். 74 நாட்கள் நடந்த அச் சண்டையில் பிரிட்டிஷ் கடற்படையிடம் அர்ஜன்டைனா தோற்றது!

உலகெங்குமிருந்தும் அப்போரைக் கூர்ந்து கவனித்து வந்த போர் வல்லுனர்கள், பிரிட்டிஷ் கடற்படையின் வெற்றிக்கான முக்கிய காரணம், ஹெரச். எம். எஸ். ஹெர்மிஸ்தான் என்று ஏக மனதாகக் கூறினர்.



• மனைவி லலிதாவுடன் தளபதி ராம்தாஸ்.

# “எதிரிகளைச் சந்திக்க எப்போதும் தயார்!”

இந்தியக் கடற்படையின் தளபதி (அட்மிரல்)யாக நவம்பர் 30-ம் தேதியன்று பொறுப்பேற்கும் லக்ஷ்மி நாராயண ராம்தாஸ், பம்பாயில் செட்டிலாகி விட்ட தமிழ்க் குடும்பத்தைச் சேர்ந்தவர். கடற்படையில் லெப்டினன்டாகப் பணியாற்றிய போது, அப்போதைய தளபதி ஆர். டி. கட்டாரியின் புதல்வி லலிதாவைக் காதலித்து மணந்தார். கடந்த பதினைந்தாம் தேதி சென்னை வந்திருந்த போது, இலங்கைப் பிரச்னை தொடர்பாக 'இந்தியக் கடற்படைக்கும் தமிழக அரசுக்கும் இடையில் நிலவ வேண்டிய ஒத்துழைப்பில் தமிழக அரசின் போக்கு குறித்து ஓர் அம்சத்தில் அதிருப்தி தெரிவித்தார். அது ஒரு பரபரப்பையே தோற்றுவித்து விட்டது! அந்தப் பரபரப்புக்கு இடையிலும் கடற்படையின் செயல்பாடுகள் பற்றிக் கல்கிக்குத் தனியாகப் பேட்டியளித்தார்...

அதன் பிறகுதான், நாம் பிரிட்டிஷ் அரசாங்கத்திடமிருந்து அக் கப்பலை வாங்கி, 'ஐ. என். எஸ். விராட்' என்று பெயரிட்டோம்.

ஐ. என். எஸ். விராட்டிலிருந்து செயல்படும் விமானங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். முதலாவது வகை: ஸீ ஹேரியர்.

சாதாரணமாக ஒரு விமானம் ஓடு பாதையில் சிறிது தூரம் ஓடித்தான் வானத்தில் பறக்கும். ஆனால் இந்த ஸீஹேரியர் அப்படிப்பட்டதல்ல. தேவைப்பட்டால் ஹெலிகாப்டர் மாதிரி நின்ற இடத்திலிருந்து செங்குத்தாகவே மேலெழும்பி பின்னர் எந்தத் திசையிலும் பறக்கும் சக்தி வாய்ந்தது. அந்தரத்தில் எத்தனை நேரமானாலும் ஆடாமல் அசையாமல் நிற்கவும் செய்யும். அதி நுட்பமான சாதனங்களைக் கொண்ட மிகச் சிறந்த போர் விமானம் இது.

இரண்டாவதாக 'சேத்தக்' என்ற வகை ஹெலிகாப்டர்கள். இது எதிரிக் கப்பல்களைத் தாக்க உதவுவதற்கு மட்டுமே பயன்படுவதில்லை. கடலில் காணாமல் போனவர்களைத் தேடிக் கண்டுபிடித்துக் காப்பாற்றவும் பயன்படுகிறது. அதே போல் புயல் – வெள்ளம் ஏற்படுகிறபோது, நிலப் பகுதிகளில் தவிக்கும் மக்களைக் காப்பாற்றவும் இது பயன்படுகிறது. இப்படி இரண்டுக்குமே பயன்படுவதால் இதை 'ஏஞ்சல்' என்றும் செல்லமாக அழைக்கிறார்கள்.

மூன்றாவதாக முக்கிய இடம் வகிப்பது ஸிகிங். இது சேத்தக் ஹெலிகாப்டரை விட மிகப் பெரிய ஹெலிகாப்டர். அதாவது, இது சுமந்து செல்லும் எரிபொருளின் எடையே சேத்தக் ஹெலிகாப்டரின் மொத்த எடையை விட அதிகம் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! எதிரிக் கடற்படைக்கு இது மிகப் பெரிய தலைவலி! அதுவும் எதிரிப் படையின் நீர்மூழ்கிக் கப்பல்களுக்கு இது சிம்ம சொப்பனம்!

இது கடலுக்கு மேல் பறந்து கொண்டே சில குறிப்பிட்ட 'சிக்னல்'களைக் கடலுக்குள் அனுப்பி, அதன் மூலம் கடலுக்கடியில் ஒளிந்திருக்கும் எதிரியின் நீர்மூழ்கிக் கப்

கேள்வி: கடற்படையில் சேர வேண்டும் என்கிற எண்ணம் உங்களுக்கு எப்படி ஏற்பட்டது?

ராம்தாஸ்: முதல் தேதி கிடைக்கப் போகும் சம்பளத்துக்காக மட்டுமே ஏதாவதொரு வேலை செய்வதில் என்ன சாதிக்க முடியும்? சவால்களைச் சந்தித்துச் சாதனைகள் புரிய வேண்டும் என்கிற எண்ணம் எனக்கு. இதற்குக் கடற்படைதான் சிறந்த இடம் என்று தேர்ந்தெடுத்தேன். கடற்படை மட்டும்தான் 3–D சர்விஸ் என்று அழைக்கப்படுகிறது. அதாவது, கடலுக்கு மேலே, கடலின் ஆழத்தில், ஆகாயத்தில் என்று மூன்று பரிமாணங்களிலும் செயல்படுகிறது! தேச சேவைக்காக இந்த வெள்ளைச் சீருடையை அணிவதில் இருக்கும் சந்தோஷமே அலாதிதான்.

கேள்வி: போர் அபாயம் உள்ளதா?

ராம்தாஸ்: இப்போது இந்திய மண்ணுக்கு உள்ளேயும் வெளியேயும் உள்ள சூழ்நிலை திருப்திகரமாக இல்லை. உள்நாட்டுப் பிரிவினை சக்திகளைச் சில வெளிநாட்டுச் சக்திகள் வளர்த்து வருவதால், போரபாயமே கிடையாது என்று அடித்துச் சொல்ல முடியாது.

கேள்வி: இப்போது தோன்றியுள்ள வளைகுடா பிரச்னை பற்றி...?

ராம்தாஸ்: அது உலகளாவிய பிரச்னை. பொருளாதார ரீதியில் உலக நாடுகள் பலவற்றிலும் பாதிப்பை ஏற்படுத்தியுள்ளது. தவிர போர் அபாயமும் நிலவுகிறது. அந்தப் போர் அபாயம் நம்மை நேரடியாகப் பாதிக்காவிட்டாலும் கூட, நம் தேசம் மூன்று புறமும் கடலால் சூழப்பட்டிருக்கும் நிலையில் பல்வேறு அயல்நாட்டுப் போர்க் கப்பல்கள் அதிக அளவில் அருகில் இருப்பது நமக்கு உகந்தது அல்ல. எனவே விழிப்புணர்வுடன் இருக்கிறோம்.

கேள்வி: போர் என்று வந்து விட்டால் அதில் நமது கடற்படையின் தயார் நிலை எப்படி?

ராம்தாஸ்: எதிரிகளைச் சந்திக்க எப்போதும் தயாராகத்தான் இருக்கிறோம்.

கேள்வி: நமது கடற்படைக்கு இப்போதுள்ள யுத்தத் தளவாடங்கள் போதுமானவைதாமா?

ராம்தாஸ்: மூன்று பக்கங்களிலும் கடலால் சூழப்பட்டிருக்கும் நமது கடற்படையின் தேவைகளும் அதிகம்தான். அதோடு, ஆண்டுதோறும் நவீனப்பட்டுக் கொண்டே வரும் போர்த்தளவாடங்களையும் கருத்தில் கொண்டால், நமது தேவையும் அதிகரிக்கத்தான் செய்கிறது.

கேள்வி: வரும் ஆண்டுகளில் கடற்படைக்கான ராணுவ பட்ஜெட் அதிகரிக்கப்பட வேண்டும் என்கிறீர்களா?

ராம்தாஸ்: அதிகரிக்கப்பட்டால் நல்லது. இப்படிச் சொல்வதால் நாம் பின்தங்கியிருக்கிறோம் என்று அர்த்தமாகி விடாது.

பலை அடையாளம் கண்டு, மிக சக்தி வாய்ந்த ஏவுகணைகளை அனுப்பி அவற்றைக் கடலுக்கடியிலேயே சமாதி கட்டி விடும்! அதே போல், எதிரிகளிடமிருந்தும் துரிதமாகத் தப்பித்துக் கொண்டு பறந்து விடும் சாமர்த்தியமும் இதற்கு உண்டு!

இப்படி, ஐ. என். எஸ். விராட்டில் சக்தி வாய்ந்த விமானங்களும் ஹெலிகாப்டர்களும் சுமார் 37 இருக்கின்றன. அதிகாரிகளும், மாலுமிகளுமாக 1650 பேர் இக்கப்பலில் தங்கியிருக்கிறார்கள்.

உள்ளே என்னென்ன வசதிகள் தெரியுமா? பொழுது போக்குவதற்காக விளையாட்டு அரங்கங்கள், நூலகம், க்ளோஸ்ட் சர்க்யூட் செய்யப்பட்ட அறுபது டி. வி. செட்டுகள், வீடியோ லைப்ரரி, மற்றும் பதினாறு படுக்கை வசதி கொண்ட மருத்துவமனை, இரண்டு ஆபரேஷன் தியேட்டர்கள், ரத்த சேமிப்பு வங்கி என்று ஒரு சிறிய நகரத்தைப் போல் எல்லா வசதிகளுமே அடங்கியுள்ளன. யூனியன் பேங்க் ஆப் இந்தியாவின் கிளை அலுவலகம் ஒன்றே கப்பலுக்குள் இயங்கிக் கொண்டிருக்கிறது என்றால் நீங்களே கற்பனை செய்து கொள்ளலாம்.

இத்தனை சக்தி வாய்ந்த ஐ. என். எஸ். விராட்டில் எழுதப்பட்டுள்ள சமஸ்கிருத வாசகம் என்ன தெரியுமா? 'ஜல்மேவ யஸ்ய பல்மேவதஸ்ய!' 'தண்ணீருக்குள் இருக்கும் வரை நான்தான் பலவான்' என்பது அதன் அர்த்தம். அதே போல் நாம் அனைவரும் ஒற்றுமையோடு இருந்தால், நம்மை விட பலவான் இங்கே யார் இருந்து விட முடியும்?

பேட்டி, கட்டுரை மற்றும் அட்டை வண்ணப்படம்: **கே. ஆர். மோஹன்**

**படங்கள் — தகவல் உதவி: கடற்படை மேற்கு, கிழக்கு கமாண்டுகள் மற்றும் ரியர் அட்மிரல் ஸ்ரீதரன் (ஓய்வு).**

# நமுட்டுச் சிரிப்புடன் நாட்டு நடப்பு!




"மெட்ராஸ்ல நல்ல மழை போலிருக்கே; தண்ணீர்ப் பிரச்னை தீர்ந்ததா?"

"இப்போ குழாயைத் திறந்தால் தண்ணி! பால் பாக்கெட்டைப் பிரிச்சாலும் தண்ணி!"




"என்னய்யா! எந்தக் காய்கறி கேட்டாலும் 'கிலோ பத்து ரூபாய்'னு சொல்றே?"

"இதுல ஜாதி வேற்றுமை பார்க்கிறதில்லைங்க; ஒருமைப்பாட்டுக்குத்தான் முதலிடம்!"

"காஸ் பிரச்னை டாக்டர்..."

"நம்ம வீட்டிலும் அதே கதைதான். வேற யார் கிட்டேயாவது சிலிண்டர் கடன் கேட்டுப் பாருங்க."




"டெலிகாம் ஸ்டிரைக்கிலே ஒரு நன்மை."

"என்ன?"

"டெலிபோன் எல்லாம் செத்துப் போய் ராங் நெம்பர்ங்கிற தொல்லையே கிடையாது!"




"வரதட்சிணைக் கொடுமை காரணமா ஸ்டவ் வெடிக்கிற கேஸுங்களை இன்றைக்கும் நிறையச் சந்திக்கிறதா அந்த டாக்டரம்மா சொல்றாங்க, ஸார்!"

"அட போய்யா, மண்ணெண்ணெய்க்கு அவனவன் தவியாத் தவிச்சுக்கிட்டிருக்கிற போது இதை எவன்யா நம்புவான்?"




கருத்து: ஜூனி

# மாறுபட்ட சேவை!
# இதுவே எங்கள் தனித்தன்மை.



"வலம்புரிச் சங்கு" இயற்கையாகவே ஓர் அரிய மாற்றம்
தெய்வத் தன்மை கொண்டுள்ள ஒரு தனிப் படைப்பு.

**ஆம். இதே போல் உலகில் சில தோற்றங்களுக்கு ஒரு தனிப் பெருமை.**

சிட்டி யூனியன் வங்கி இதே போல் தனக்கென்று ஒரு
தனித் தன்மையுடன் செயல்படுகிறது. உங்கள் தேவை
அறிந்து அதற்கு ஏற்றவாறு பணிபுரிவதே எங்கள்
முக்கியக் குறிக்கோள்.

உங்கள் சேமிப்பு வளர எங்களிடம் உங்கள் வசதிக்கேற்ற பல நல்ல திட்டங்கள் உள்ளன.
இன்றே அணுகுங்கள் - CUB நேசக்கரம் நீட்டி உங்களை வரவேற்கக் காத்திருக்கிறது.

*நாடுவீர் எம்மை —*
*பெறுவீர் நன்மை!*



**CUB**

**சிட்டி யூனியன் பாங்க் லிட்.,**
பதிவு அலுவலகம்: கும்பகோணம்-612 001.
**CUB – உங்கள் வளர்ச்சிக்கேற்ற வங்கி.**

**CUB - அங்கீகரிக்கப்பட்ட அந்நியச் செலாவணி டீலர்கள்**

- சேமிப்புக் கணக்கு
- மாதாந்திர சேமிப்புத் திட்டங்கள்
- ரொக்கப் பத்திரங்கள்
- [illegible] வைப்புத் தொகை
- காலவரை வைப்புத் தொகை
- அயல் நாட்டு இந்தியர்களுக்கான சேமிப்புத் திட்டங்கள்.

MCS/CUB/522

## காசி பில்டர்ஸ் என்றால் ராசியான பில்டர்ஸ்




பிரேம்ராஜ் ரூ.3000/- 'ஏ' குரூப்.

'நான் காசி பில்டர்ஸ் ஹவுசிங் பெனிஃபிட் ஸ்கீம் மூலம் 3 லட்சம் பெறுமான வீட்டை அடைந்தேன். வீடு ரொம்ப பிரமாதமா இருக்கு.'

ஜி.குமார், ரூ.2000/- 'ஏ' குரூப்.

'விக்கிற விலைவாசியில சொந்தமா வீடு கட்றது சாத்தியமில்லாத விஷயம். ஆனா, இப்ப நான் 2 லட்சம் பெறுமானமுள்ள வீட்டுக்கு சொந்தக்காரன்'.



எஸ்.அந்தோணி ரூ.1500/- 'ஏ' குரூப்.

'வீடுகள் எப்படியிருக்குமோன்னு சந்தேகப்பட்டு சென்னை 91-92 ஜவஹர்லால் நேரு சாலை, காசி தியேட்டர் காம்ப்ளக்ஸில் உள்ள காசி பில்டர்ஸ் உரிமையாளர் எம்.கே.மதிவாணனை போய் பார்த்தேன். அவர் கொடுத்த விளக்கங்கள் என்னை தெளிய வைத்தது. வீடுகள் நல்லாயிருக்கு'

அடுத்த குலுக்கல் நாள் 17.02.1991.
''B'', ''C'' குரூப்களில் உறுப்பினர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகின்றனர்,

17.2.91-ல் நடைபெறும் குலுக்கலில் நீங்களும் ஒரு வீடு பெறும் அதிர்ஷ்டசாலியாக இருக்கலாம் அல்லவா?

### காசி குரூப் ஹவுசிங்
### பெனிபிட் ஸ்கீம் மூலம் பெறுவீர்

ஏ.ஆதிநாராயணன், ரூ.1000/- 'ஏ' குரூப்

'சொந்தமா வீட்ல இருந்துகிட்டே ஆயிரம் ரூபாயை வாடகை குடுக்கிற மாதிரி தவணையா குடுத்து கிட்டு வர்றோம். கண்ணுக்கு தெரியாம கடன் அடைஞ்சு போகுது.'



ஆர்.சேதுராமன் ரூ.1000/- 'பி' குரூப்.

'சென்னையில வீடு வாடகைக்கு கிடைக்கறது கஷ்டம். அப்படியே கிடைச்சாலும் ஒண்ணு வாடகை அதிகமா இருக்கும் அல்லது வீடு மோசமாயிருக்கும். 'காசி ஹவுசிங் பெனிஃபிட் ஸ்கீம்'ல பணம் கட்டி வந்ததால எனக்கு சொந்தமா சென்னையில வீடு கிடைச்சிருக்கு!'

எஸ்.கோவிந்தசாமி ரூ.750/- 'ஏ' குரூப்

'எங்களைப் போல உள்ளவங்களுக்கு இந்த மாதிரி ஸ்கீம்ல வீடு வாங்கினாத்தான் உண்டு. எங்களுக்கு இது ஒரு நல்ல வாய்ப்பு' என்றார் இவர் அப்பா.

PHONE: 4821969 4822206

இந்த திட்டத்தில் சேர விரும்புவோர் ரூ.15 செலுத்தி நேரிலும், ரூ.25/- "KASI GROUP HOUSING BENEFIT SCHEME" என்ற பெயர்க்கு D.D அல்லது M.O. அனுப்பி விண்ணப்பங்கள் பெறலாம்.

# காசி பில்டர்ஸ்



காசி A/C தியேட்டர் காம்ப்ளக்ஸ்
91-92, ஜவஹர்லால் நேரு சாலை, அசோக் நகர், சென்னை-95.

●● 'எங்கள் சாமி ஐயப்பன்' படத்தில் ஒரு நாள் வேலை பாக்கி வைத்திருந்தாராம் நாகேஷ். இதற்கிடையில் ஆந்திராவிலும் மைசூரிலும் இரண்டு ஷூட்டிங்குகள். அவற்றை முடித்து விட்டு வந்து ஐயப்பன் பட வேலையை முடித்துத் தருவதாக வெளியூர் புறப்பட்ட நாகேஷ், அடுத்த நாளே திரும்பி வந்து விட்டார். புயல் காரணமாக வெளியூர் ஷூட்டிங்குகள் ரத்தாகி விட்டன. ஐயப்பன் படத்தைப் புறக்கணித்து விட்டு வெளியூர் சென்றதுதான் இதற்குக் காரணம் என்று நாகேஷின் மனம் உறுத்தவே, முதலில் இதை முடித்துக் கொடுத்தாராம்.



* சிந்து: கவர்ச்சியை வெறுக்கிறார்...



* மண்ணாங்கட்டி — ஜனகராஜ்: புதிய ஜோடி!



* நாகேஷ்: மனம் உறுத்தியது!

# காமெடி ட்ராக்கில் புதிய ஜோடி!

வருஷம் ஓர் ஐயப்பன் படம் என்கிற தமது வாடிக்கையை, இந்த வருஷம் 'எங்கள் சாமி ஐயப்பன்' மூலம் பூர்த்தி செய்கிறார் தசரதன். கமலோடு குழந்தை நட்சத்திரமாக சினிமாவில் காலடியெடுத்து வைத்த தசரதன் டைரக்ஷனுக்குத் திசை மாறி விட்டதோடு, இப் படத்தில் இசையமைப்பாளராகவும் மாறியிருக்கிறார்.

●● கவுண்டமணி — செந்தில் ஜோடியின் காமெடி மவுசு குறைந்து கொண்டே வரும் இந்த நேரத்தில், மண்ணாங்கட்டி — ஜனகராஜ் என்று ஒரு புதிய ஜோடி உதயமாகியிருக்கிறது, தங்கத் தாமரைகள் படத்தில். இப்போதெல்லாம் ஹீரோவுக்கும் வில்லனுக்கும் நடக்கிற ரோஷமான சண்டைக் காட்சிகளே காமெடியில்லாத குறையைத் தீர்த்து வைத்து விடுகிற நிலையில், இந்த ஜோடியாவது தாக்குப் பிடிக்குமா, பார்ப்போம்!

●● 'கவர்ச்சி' ரோல் என்றாலே காதைப் பொத்திக் கொள்கிறார் சிந்து. 'இணைந்த கைகள்' படத்திற்குப் பிறகு அது போன்ற கவர்ச்சி ரோல்களுக்குக் கால்ஷீட் கேட்டு வந்தவர்களைப் பாரபட்சம் பாராமல் திருப்பியனுப்பி விட்டாராம். நல்ல கதையம்சம் கொண்ட காரெக்டர் என்றால் பணத்தைப் பற்றியெல்லாம் பேசாமலே கால்ஷீட் தரத் தயாராய் இருக்கிறாராம். சிந்து மட்டும்தான் இப்படி என்றில்லை; சிலுக்கு கூட இப்போது கவர்ச்சியை வெறுக்கிறாராம். இப்படி இவர்கள் மட்டும் மாறினால் போதுமா, ரசிகர்கள் மாற வேண்டாமா! பார்ப்போம்.

●● சினிமா வில்லன்கள் கூட இப்போது அலுத்துப் போயிருக்கிறார்கள். உதாரணத்திற்கு சரத்குமார். 'பாலைவனப் பறவை'களில் வில்லனாக அறிமுகமான இவர், இப்போது மென்மையான குணச்சித்திர வேடங்களையே விரும்புகிறாராம். (உ-ம்.): சித்திரைப் பூக்கள். இப்படி வில்லன்களெல்லாம் தாமாகவே திருந்தி விட்டால் ஹீரோக்களுக்கு ஏது வேலை!

— எஸ். பாலு.



* சரத்குமார்: மனம் மாறினார்!




# கல்கி

1990 டிசம்பர் 2
மலர் : 49 இதழ் 18
பிரமோதூத கார்த்திகை 16




## பெரிய மனிதர்களே, நாட்டைக் கவனியுங்கள்!

திக்கித் திணறி, தவித்துத் திண்டாடி ஒரு வழியாக இரு நபர் அமைச்சரவையை விஸ்தரித்து விட்டார் சந்திரசேகர். அமைக்கப்பட்டுள்ள அமைச்சரவை நாட்டிலுள்ள பிரச்னைகளைச் சந்தித்துத் தீர்த்துவிடப் போவதில்லை என்பது ஒருபுறமிருக்க, மந்திரி சபை அமைப்பதே மாபெரும் பிரச்னையாக இருந்திருக்கிறது, சந்திரசேகருக்கு! மந்திரி சபை அமைக்க ஆள் கிடைக்காமல், இத்தனை கஷ்டப்பட்ட பிரதமர் உலகச் சரித்திரத்திலேயே இன்னொருவர் இல்லை!

தேர்தல் பிரசாரம் போலவே ராஜீவ் சுறுசுறுப்படைந்து பேச ஆரம்பித்திருக்கிறார். 'வருகிற பிப்ரவரி மாதம் அரசு ஊழியர்களுக்குச் சம்பளம் கொடுக்கக் கஜானாவில் பணம் இராது; பொருளாதார நிலைமை அவ்வளவு மோசம்' என்கிறார். இந்த நிலைமை வி. பி. சிங் ஆட்சியில் திடீரென்று ஏற்பட்டு விடவில்லை என்பதும், காங்கிரஸின் நாற்பது வருட பொறுப்பற்ற, ஆடம்பர ஆட்சியின் பலனே என்பதும் பாமரருக்கும் புரிய வேண்டும். ஸத்தாம் ஹுஸைனின் நடவடிக்கை உலகளாவிய பொருளாதாரச் சிக்கலைத் தோற்றுவித்துள்ளது போல், இங்கேயும் உருவாக்கியிருக்கிறது என்பது மேலும் ஒரு விசனிக்கத்தக்க உண்மை.

போகட்டும், ராமஜென்மபூமி பிரச்னையில் ராஜீவ் காந்தியோ, சந்திரசேகரோ புதிதாக என்ன சொல்கிறார்கள்? ஏதொன்றுமில்லை. 'பேச்சு வார்த்தைகள் மூலம் பிரச்னைக்குத் தீர்வு காண வேண்டும் அல்லது நீதிமன்றத் தீர்ப்புக்குத் தலைவணங்க வேண்டும். பி. ஜே. பி. யின் போக்கு தவறானது' என்றுதான் கூறுகிறார்கள். இதையேதான் வி. பி. சிங்கும் சொன்னார்.

'பஞ்சாபில் பயங்கரவாதிகள் தீவிரமாக ஒடுக்கப்பட வேண்டும்; அதே நேரத்தில் வளர்ச்சித் திட்டங்கள் மூலம் ஜனநாயகப் பற்றுள்ள மக்களின் நம்பிக்கையை வளர்க்க வேண்டும்' என்கிறார் சந்திரசேகர். இதில் வி. பி. சிங் கடைப்பிடிக்காத புதிய கருத்து என்ன? ஒன்றுமில்லை. அதே கொள்கைகள்தான். அமுல்படுத்தப் போவதும் அதே

மந்திரி சபை அமைப்பு
பலே... பலே... தூக்கிட்டீங்களே!
அப்பா... அம்மா... அய்யோ...
ராஜீவ்
13
நாட்டின் பிரச்னைகள்







அதிகாரிகள்தாம். அரசியல் தலைமையில் மட்டுமே மாறுதல்! ஆக, இந்த மாறுதல் ஏன் ஏற்பட்டது. எதற்காக என்றால் 'வடிகட்டின சுயநலம்' என்பது மட்டுமே பதில்.

நாட்டின் பிரச்னைகள் 'குய்யோ முறையோ' என்று கதறிக் கொண்டிருக்கின்றன. சமாதானம் பண்ண முடியாது என்பதல்ல. ஆனால் நாளாக ஆக, பிரச்னைகளுக்குத் தீர்வு காண்பது கடினமாகி வருகிறது என்பதும் உண்மை. இன்றுள்ள ஆட்சியோ அல்லது நாளைக்குப் பதவிக்கு வரக் கூடிய ராஜீவ் ஆட்சியோ இந்தப் பிரச்னைகளைச் சமாளிக்க முடியாது. நேர்மைமிக்க நல்லறிஞர்கள், பொருளாதார வல்லுனர்கள், யதார்த்தப் போக்குள்ள விஞ்ஞானிகள் போன்ற மேதைகளால்தான் பிரச்னைகளைத் தீர்க்க வழி காண முடியும். இவர்கள் அரசியல் சார்பற்ற ஓர் அமைப்பின் கீழ் இணைய வேண்டும். அதற்குத் ''தேசிய ஆலோசனைக் குழு'' என்று பெயர் சூட்டலாம். நாட்டில், மக்களின் மதிப்பைப் பெற்ற பெருமக்கள் பலர் பல்வேறு துறைகளில் உள்ளனர். இவர்கள் இவ்வாறு ஒரு மன்றத்தை அமைத்து, மாதம் இருமுறை, அல்லது குறைந்தபட்சம் மாதம் ஒரு முறையாவது மாறி மாறி நாட்டின் பெருநகர் ஒன்றில் கூடி, பிரச்னைகளை அரசியல் ஆவேசத்துடன் அன்றி, யதார்த்த நல்லறிவுடன் ஆராயலாம். ஆட்சியில் உள்ளோருக்கு நல்ல ஆலோசனைகளை வழங்கலாம். அரசியல் ஆதாயம், சுயநலம் ஏதுமின்றி பெருமக்களால் வழங்கப்படும் இந்த யோசனைகளை ஆட்சிப் பொறுப்பில் உள்ளவர்கள் அத்தனை எளிதாக ஒதுக்கித் தள்ள முடியாது. அப்படியே நிராகரித்தாலும், மக்களுக்கேனும் நல்லது கெட்டது தெரிய வரும். காரணம், இந்தக் குழுவின் ஆய்வுகளுக்கும் முடிவுகளுக்கும் எல்லா நாளிதழ்களும் முக்கியத்துவம் தரும். தூர்தர்ஷன், அகில இந்திய ரேடியோ ஆகியவையும் உரிய மதிப்பு அளிக்கும்.

இந்தக் குழுவினரிடையே சில அம்சங்களில் கருத்து மாறுபாடு இருந்தாலும் பாதகமில்லை. ஆரோக்கியமான விவாதங்களால் தெளிவு பிறக்கவே செய்யும். இதில் பெரும் புள்ளிகள் பலர் இருப்பார்கள். ஆதலால் பணம் திரட்டுவதும் எளிது. கணக்கு வழக்குகளைத் தணிக்கை செய்து பகிரங்கமாக்கி, அரசியல் கட்சிகளுக்கும் இவ்விஷயத்தில் வழிகாட்டலாம். நாட்டின் எதிர்காலம் பற்றிக் கவலைப்படும் ஒவ்வொரு பெரிய மனிதரும் இதுபற்றிச் சிந்தித்துச் செயல்பட வேண்டும்.

பார்க்கப் போனால் மேல்சபை என்ற அமைப்பே இதற்காக ஏற்பட்டதுதான். ஆனால் அதிலும் இப்போது கட்சி அரசியலும் அரசியல் ஆதாயமும் புகுந்து விட்டதால் அரசுச் சார்பற்ற ஒரு சுதந்திர அமைப்புக்கு இப்போது அவசியம் ஏற்பட்டிருக்கிறது.

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# தடைப்பட்ட தேன்நிலவு!





























**ம**னவியல் நிபுணர்களாகவும் செயல்புரியும் மனவியல் நிபுணர்களான டாக்டர் **விஜயகுமார்**, டாக்டர் **லக்ஷ்மி** கூறியவை:

மீனா மயக்கமுற்ற, அல்லது உடல்நலக் குறைவுற்ற எல்லாச் சந்தர்ப்பங்களையும் வரிசைப்படுத்தச் சொல்லி இளம் தம்பதிகளைத் தனியே அழைத்துக் கேட்டோம். ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் அவர்கள் இருவரும் சேர்ந்து வெளியே போகையிலோ அல்லது சற்று அந்நியோன்னியமாய் அமர்ந்து பொழுதைக் கழிக்கையிலோதான் அந்த அம்மாளுக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டது என்பதைச் சுட்டிக்காட்டினோம். அவர்களும் அதை வியப்புடன் ஏற்று, "நாங்கள் தாம்பத்தியம் நடத்துவதே அவளுக்குப் பிடிக்கவில்லையென்றால் பிரச்னையை எப்படித்தான் தீர்ப்பது?" என்று கவலைப்பட்டனர்.

அந்த அம்மாளுக்கு எல்லாமே தன் மகன்தான் என்ற நிலை. இளம் வயதில், அன்பற்ற கணவனிடம் அவதிப்பட்டு, பிறகு அவரையும் இழந்து, உடல், பொருள், ஆவி அனைத்தையும் மகனுக்கே அர்ப்பணித்து வாழ்ந்தவள். அவளே பெண் பார்த்துத்தான் அவனுக்கு மணம் முடித்தாள். எனினும் அவனை இழந்துவிடுவோமோ என்ற பயம் அவளை வாட்டியது. அதனால்தான் தம்பதி நெருக்கமாகப் பழகும்போதெல்லாம் மனோதத்துவ ரீதியாக ஓர் உடல் பாதிப்பு ஏற்பட்டு அவர்களைப் பிரித்தாள்.

அவளை அனுதாபத்துடன் அணுகிப் புரிந்துகொள்ள, அத்தம்பதிக்கு அறிவுரை வழங்கிய அதே நேரத்தில் அந்த அம்மாளுக்கும் நிறைய அறிவுரை வழங்கினோம்.

இத்தகைய கேஸ்களில் பிரச்னையைத் தீர்க்கும் சக்தி மருமகளிடம்தான் அதிக அளவில் உண்டு. கணவன் தனக்கு மட்டுமே உரியவன் அல்ல என்று தான் உணர்வதை வெளிப்படுத்தி மாமியாரையும் அரவணைத்து வாழ்க்கை நடத்த வேண்டும்.

பேட்டி: **எஸ்ஸார்.**

**அடுத்த இதழில்: கசந்து போன காதல்!**

# பூடான் புத்தாண்டு பம்பர்

ராயல் பூடான் அரசு

மொத்தப் பரிசுத் தொகை
நா/ரூ.
**3.47**
கோடி

டிக்கட் விலை
(ஒன்று)
நா/ரூ.
**10/-**

தபால் மூலம் டிக்கெட்டுகள்
பெற சிறப்பு சலுகை!

ராயல் பூடான் அரசு புத்தாண்டு பம்பர்

முதல் பரிசு
நா/ரூ.
**1.21**
**கோடி**

2வது பரிசு
நா/ரூ.
**11**
லட்சம்

254வது குலுக்கல்
நாள்
**1.1.1991**

3வது பரிசு
நா/ரூ.
**5** x 6
லட்சம் பரிசுகள்

4வது பரிசு
நா/ரூ.
**1** x 30
லட்சம் பரிசுகள்

5வது பரிசு
நா/ரூ.
**50,000**
x 60 பரிசுகள்



M/s. டெக்கான் லாட்டரி
ஏஜென்சி





* கட்டுரை ஆசிரியர்

# “டியூஷன் வாத்தியார் சுப்பிரமணியம்”

எனது பள்ளி நாட்களில், ''ஆனந்த விகட''னில் பேராசிரியர் ''கல்கி''யின் கதைகள், கட்டுரைகள், சங்கீத, அரசியல் விமர்சனங்கள் முதலியவற்றைப் படித்து, எனக்கு அவர்பால் பைத்தியமே பிடித்திருந்தது என்று சொன்னால் மிகையில்லை. சென்னைக்கு வந்து, அவரை நேரில் சந்தித்து, ஒரு நிமிஷமாவது அவரோடு பேசி விடவேண்டும் என்ற வெறி என்னுள் அலைமோதியது.

எனது பள்ளிப் படிப்பை முடித்தவுடன், வேலை தேடி 1940ம் வருஷம் சென்னை வந்தேன். ''கல்கி'' அவர்களின் வீட்டு விலாசத்தைத் தெரிந்து கொண்டு, போக்ரோடில் இருந்த அவர் வீட்டிற்குச் சென்றேன். அவரைப் பார்க்கச் சிலர் வெளியில் காத்திருந்தனர். எல்லோரும் போன பிற்பாடு, அவரைச் சந்தித்தேன். ஆனால் என்ன பேசுவது என்று தெரியாமல், மௌனம் சாதித்தேன். அவர் உடனே சகஜமாக, ''என்ன சமாசாரம்?'' என்று அன்புடன் கேட்டார். கொஞ்சம் துணிவு பெற்றவனாக, ''நீங்கள் ''ஆனந்த விகட''னில் எழுதும் கதைகள், கட்டுரைகள், தலையங்கங்கள், முதலானவற்றைப் பல வருஷங்களாகப் படித்து வரும் உங்கள் ''விசிறி'' நான்'' என்று மனப்பாடம் செய்திருந்ததை ஒப்பித்தேன். 'கல்கி' சிரித்து விட்டு, ''இதைச் சொல்லவா, தஞ்சாவூரிலிருந்து இங்கு வந்தாய்? ஒரு போஸ்ட் கார்டில் உனது பாராட்டை எழுதி எனக்கு அனுப்பியிருக்கலாமே,'' என்றார்.

நானும் சேர்ந்து சிரித்து விட்டு, எனக்கு, ஏதாவது ஒரு பத்திரிகாலயத்தில் சேர்ந்து, பணியாற்ற வேண்டும் என்ற விருப்பமிருப்பதாகக் கூறினேன். அதற்கு அவர், ''தற்சமயம் என் வசம் உனக்குத் தகுந்த வேலை இல்லை. அதற்குரிய நேரம் வந்தால், உன்னை ஏதாவது ஒரு வேலையில் அமர்த்திக் கொள்கிறேன்'' என்று கூறினார்.

அப்போதுதான் அவர் ''ஆனந்த விகடனை'' விட்டுப் பிரிந்து, ''கல்கி''யைத் தொடங்கும் வேலையில், இரவு பகலாக, ஓய்வு ஒழிவில்லாமல், ஈடுபட்டிருந்தார்.

''உங்கள் இஷ்டம்'' என்று நான் கூறி விடைபெற்ற போது, எனக்கு ஏற்பட்டிருந்த ஏமாற்றம் என் குரலில் ஒருவேளை தொனித்ததோ என்னவோ, வெளியேறிக் கொண்டிருந்த என்னைத் திரும்ப அழைத்து, ''உனக்கு அசௌகரியமில்லை என்றால், நல்ல வேலை கிடைக்கும் வரையில், என் மகளுக்கும், மகனுக்கும் என் வீட்டிலேயே தங்கி, பாடம் சொல்லிக் கொடு'' என்றார்!

எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. அதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று, முன்பின் தெரியாத என்னை அவர் வீட்டோடு இருக்குமாறு அன்புடன் சொன்னது. இரண்டாவது, இப்போதுதான் பள்ளிப் படிப்பை முடித்து விட்டு வந்துள்ள என்னைப் பிள்ளைகளுக்குப் பாடம் போதிக்கும்படி அவர் கூறியது.

''சிறுவர்களுக்குப் பாடம் போதிக்குமளவு எனக்குக் கல்வி அறிவோ, அனுபவ ஆற்றலோ இல்லையே,'' என்று தயக்கத்துடன் சொன்னேன். உடனே அவர், தமக்கே உரித்தான சிரிப்புடன், ''இந்த மாதிரியான நபர்தான் குழந்தைகளுக்குக் கல்வி புகட்டத் தேவைப்படுகிறார்கள். நிறைய படித்துவிட்டுத் தான் கற்றவைகளை எல்லாம், மாணவர்களின் மூளைக்குள் திணிப்பதுதான், பாடம் கற்பிக்கும் முறை என்று எண்ணுவது தவறு. குழந்தைகளுக்கு இயற்கையிலேயே, அறிவு உண்டு. அதை வெளிக்கொணருவதே, கல்வி புகட்டுவதின் அடிப்படை நோக்கம். பாடப் புத்தகங்களில் உள்ளவற்றை, அவர்களுக்குப் புரிய வைத்தாலே போதும். என் குழந்தைகளுக்கு

நீ நல்ல நண்பனாக விளங்கி அவர்கள் படிப்பதற்கு ஏதுவாக, உற்சாகப்படுத்தினாலே போதும்,'' என்று கூறி மறுநாள் முதலே, தம் வீட்டில் வந்து தங்குமாறு கூறி விட்டார். இன்னொரு நிபந்தனையும் விதித்தார். அதாவது குழந்தைகளுக்கு அவ்வப்போது, ராமாயண, மகாபாரதக் கதைகளையும் இதர பல கதைகளையும் சொல்ல வேண்டும் என்றார்.

அவரது சொல்லைத் தட்ட முடியாமல், மறுநாள் முதல் அவர் வீட்டில் தங்கி, குழந்தைகளுக்கு, அவர் கூறிய முறைப்படி, பாடம் கற்றுக் கொடுத்தேன். அதனால் ''டியூஷன் வாத்தியார் சுப்ரமண்யம்'' என்று, என்னை அவர்கள் குடும்பத்தில் ஒருவனாகவே, கருதும் வாய்ப்புப் பெற்றேன்.

சில மாதங்கள் சென்று திடீரென்று ஒரு நாள் எனக்குக் கடுமையான காய்ச்சல் கண்டது. ''டைபாயிட்'' என்று சில தினங்களில் அறியப்பட்டது. உயிர் பிழைப்பதே அரிது என்ற நிலையில், என்னை ராயப்பேட்டை அரசு மருத்துவமனையில் சேர்த்தார். சேர்த்த நாளிலிருந்து, குணம் அடைந்து, வீடு திரும்பும் வரையில், நாள் தவறாமல், சுமார் ஒரு மாத காலம், பல முக்கிய வேலைகளுக்கிடையில், ஆஸ்பத்திரிக்கு வந்து, என் உடல் நலம் பற்றி டாக்டர்களிடம் விசாரித்து, நல்ல முறையில் மருத்துவம் அளிக்குமாறு கூறிச் செல்வார். அவருடைய சிபாரிசின் மதிப்பு எவ்வளவு மகத்தானது என்பதை, அதைப் பெற்றுப் பயன் அடைந்த எனக்குத் தெரியும். ஒண்ட வந்த என்னை மதித்து, மனிதாபிமானத்துடன் கவனித்து வந்த அன்பின் திருவுருவம் அவர்.

ஆஸ்பத்திரியிலிருந்து வீடு திரும்பியவுடன், எனது உடல்நிலை நன்கு தேறவேண்டும் என்ற நல்லெண்ணம் காரணமாக டானிக்குகளையும், சத்துணவையும் எனக்கு அளித்தார். இதற்கெல்லாம் அவரது மனைவியார் மனப்பூர்வமான ஒத்துழைப்பைத் தந்தார். எனது சொந்த ஊருக்குச் சென்று, சில மாதங்கள் ஓய்வு பெற்று, திரும்பி சென்னை வரும் வரை, ஏற்பட்ட பல செலவுகளையும் ''கல்கி'' தாமே ஏற்றார்.

நல்ல வேலை கிடைக்க வேண்டும் என்றால், பள்ளிப் படிப்பு மட்டும் போதாது. தொழிற் கல்வியறிவும் தேவை என்பதை எப்போதும் வலியுறுத்துவார் ''கல்கி''. தட்டெழுத்து, சுருக்கெழுத்து போன்ற பாடங்களில் தேர்ச்சி பெற என்னை ஊக்குவித்ததோடு, அதற்கான செலவுகளையும் அவரே ஏற்றார். பிற்பாடு இந்திய ராணுவத்தில் உத்யோகத்தில் சேர, இப்படிப்பு எனக்கு உதவி புரிந்தது. அதன் பின்னர் படிப்படியாக என் வாழ்வில் பல திருப்பங்கள், முன்னேற்றங்கள் என்றாலும், ''கல்கி'' குடும்பத்துடன் எனது அன்புப் பிணைப்பு இன்னும் நீடிக்கிறது.

''கல்கி'' அவர்களின் அன்புள்ளத்தால் பயன்பெற்ற நான், ஒரே ஒரு எடுத்துக்காட்டுத்தான். என்னைப் போல் ஏராள மானவர் என்பதை அவரது நினைவு நாளில் (டிசம்பர் 5) நாம் எண்ணிப் பார்த்தால் அத்தகைய அன்பு நம் இதயங்களிலும் நிறையும்.

— டி. என். சுப்பிரமணியம்

---

சரித்திரக்
கதை படைக்கும்
கலை!



''கல்கி,'' முன்ஷி ஆகிய இரு மேதைகளின் படைப்பு மனங்களுக்குள்ளும் புகுந்து, அவர்களின் வரலாற்று நாவல்களைப் பற்றி ஓர் ஒப்பீடு செய்துள்ளார் கலா கே. தாக்கர். டாக்டர் பட்டத்தைக் கலாவுக்குப் பெற்றுத் தந்துள்ள பி. ஹெச்டி பட்ட ஆய்வு நூல் இது என்பதால் பயந்து ஒதுங்காமல், துணிந்து புத்தகத்தினுள் புகுந்தால் ஒரு வண்ண மலர்த் தோட்டத்தினுள் உலவி வந்த உணர்வு ஏற்படுகிறது. வரலாற்று நாவல்கள் படைக்க விரும்புவோருக்கும் சரித்திர நாவலாசிரியர்களின் உள்ளங்களைப் புரிந்து கொள்ள ஆசைப்படுவோருக்கும் அளப்பரிய ரசமான தகவல்களை உள்ளடக்கியுள்ள நூல் இது. பிற்சேர்க்கையாக அளிக்கப்பட்டுள்ள 'கல்கி,' முன்ஷி படைப்புக்களின் பட்டியல் மலைக்க வைப்பதாகும்.

— யெஸ்பால்

'கல்கி' — முன்ஷி வரலாற்று நாவல்கள் — ஓர் ஒப்பீடு — விற்பனை உரிமை: தமிழ்ப் புத்தகாலயம், சென்னை — 5, விலை ரூ. 55.00.



# தில்லி பந்த்

'தில்லி பந்த்' என்றால், முந்தைய தினத்திலிருந்தே தில்லி களைகட்டி விடும். தில்லி நிர்வாகம் முன்னேற்பாடாகப் போலீஸ் பாதுகாப்புப் போன்ற ஏற்பாடுகளைச் செய்கின்றதோ இல்லையோ, குடும்பத் தலைவிகள், முதல் நாளே சகல ஆயத்தங்களும் செய்து 'பந்த்'தைச் சமாளிக்கத் தயாராகி விடுவார்கள். கடைகள் எல்லாம் மூடியிருக்கும் என்பதால் முதல் நாளே அத்தியாவசியப் பொருட்கள், குறிப்பாக மெழுகுவர்த்தி (தினமும் ஒரு சில மணி நேரங்களுக்காவது தில்லியில் மின்சாரம் நின்றுவிடும்.) போன்ற சாமான்களை வாங்கிக் குவித்து விடுவார்கள். பந்த் அன்று பால் டிப்போ கூடத் திறக்கப்படாது என்று ஒரு பெண் புரளி கிளப்பிவிட, வேண்டியதுதான்! எல்லோரும் விழுந்தடித்துக் கொண்டு பால் டிப்போவிற்குப் போய் அரை மணி நேரம் க்யூவில் நின்று, கூடுதலாகப் பால் வாங்கி வருவார்கள். வாசலில் வரும் கறிகாய்க்காரர்களுக்கும், பழக்காரர்களுக்கும் நல்ல யோகம்தான்! மறுநாள் சந்தை மூடியிருக்கும் என்று பயமுறுத்தி, அழுகல், வாடல் எல்லாவற்றையும் யானை விலை, குதிரை விலைக்குத் தலையில் கட்டி விடுவார்கள்.

குழந்தைகளின் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள் திறந்திருக்குமா, மூடியிருக்குமா என்று ஆங்காங்கே பட்டிமன்றங்கள், விவாதங்கள் நடக்கும். வீட்டில் தொலைபேசி உள்ளவர்களும், பக்கத்து வீட்டு ஓசி போனை உபயோகிக்க வசதியுள்ள அதிர்ஷ்டசாலிகளும், பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர்களை அறுத்துக் கொன்று விடுவார்கள். நூற்றுக்கணக்கான குழந்தைகள் படிக்கும் பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களின் நிலையை எண்ணிப் பாருங்கள்!

இந்தத் தொலைபேசித் தொல்லையிலிருந்து விடுபட ஒரு வழி இருக்கிறது! தில்லியில் அடிக்கடி பந்த், பேரணி போன்ற 'வைபவங்கள்' இருப்பதால், பேசாமல் இத்தலைமை ஆசிரியர்கள் "நாளை பள்ளிக்கூடம் கிடையாது!" என்று பதிவு செய்த டேப்பைத் தங்கள் தொலைபேசியுடன் இணைத்து விடலாம். இதற்கான செலவை அரசாங்கம் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்று பள்ளிகளின் தலைமை ஆசிரியர்களும் வேண்டுகோள் விடுக்கலாம். இவர்களுடைய கோரிக்கை நிராகரிக்கப்பட்டால், அதற்காக இவர்களும் ஒரு

ரமாமணி சுந்தர்



நாள் 'தில்லி பந்த்' அறிவிக்கலாம்!

தொலைபேசியில்லாதவர்களும், குழந்தைகள் விடுமுறை நாட்களில் வீட்டில் அடிக்கும் லூட்டியைத் தாங்க முடியாத தாய்மார்களும், ஒருவேளை பள்ளிக்கூடம் திறந்திருக்குமோ என்ற நப்பாசையில் 'பந்த்' அன்றும், அரக்கப்பரக்க குழந்தைகளைத் தயார் செய்து, தரதரவென்று பஸ் ஸ்டாப்பிற்கு இழுத்துக் கொண்டு போய், பள்ளிக்கூட பஸ்ஸிற்காக அரை மணி நேரம் தவம் கிடந்து விட்டு வீடு திரும்பும் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருக்கும். குழந்தைகளோ, பள்ளியில் சாப்பிடுவதற்காக டப்பாவில் அடைத்திருந்த டிபனை, ஒரு மணி நேரத்திற்குள் விழுங்கிவிட்டு, குசேலர் வீட்டுக் குழந்தைகள் போல் 'அம்மா, பசிக்கிறது!' என்று நச்சரிக்க ஆரம்பிப்பார்கள்!

சிறு குழந்தைகளின் பாடு இப்படியென்றால், பெரிய குழந்தைகள், அதாவது டீன் ஏஜ் பெண்கள், பையன்களுக்கு பந்த் அன்று பொழுது போக்குவது ஒன்றும் பெரிய பிரச்னையே இல்லை. வீடியோவில் 'தில்' படத்தைப் பத்தாவது தடவையாகவோ, 'மேனே பியார் கியா தா' படத்தை இருபதாவது தடவையாகவோ பார்த்து உருப்படியாகப் பொழுதைக் கழித்து விடுவார்கள். தெருவுக்குத் தெரு முளைத்திருக்கும் வீடியோ பார்லர்களில் 'பந்த்'திற்கு முதல்நாள் கூட்டம் 'ஜே. ஜே'தான்!

இப்பொழுதெல்லாம், பந்த் என்று அறிவிப்பு வரவேண்டியதுதான். தில்லி போக்குவரத்துக் கழகம் பயந்து நடுங்கிக் கொண்டு பஸ்களை நிறுத்தி விடுகிறது. கடந்த சில மாதங்களில் தில்லியில் நடந்த போராட்டங்களின் விளைவு, ஒரு பஸ்ஸில் கூட ஜன்னல்களில் கண்ணாடி கிடையாது. கின்னஸ் புத்தகத்தில் இடம்பெறத் துடிக்கும் இளைஞர்கள் கண்ணாடி இல்லாத பஸ்களில், ஜன்னல் வழியாகவே ஏறி, இறங்கி டிக்கெட் இல்லாமல் பயணம் செய்து, சாதனை புரிந்து வருகிறார்கள்.

மேலும்மூச்சுத்திணறும்படி, புளி மூட்டை மாதிரி அடைந்து கொண்டு பஸ் சவாரி செய்யும் தில்லிவாசிகளுக்கு, கோடைக் காலத்தில் ஜிலுஜிலு என்று காற்று வந்து கொண்டு, கண்ணாடி இல்லாத பஸ்கள் வரப்பிரசாதமாக இருந்தது. ஆனால், இப்பொழுது குளிர்காலம் ஆரம்பித்து விடவே, தில்லிவாசிகள் 'வெடவெட'வென்று நடுங்கிக் கொண்டு பஸ்ஸில் பயணம் செய்கிறார்கள். ஏற்கெனவே உடைந்து போன ஜன்னல் கண்ணாடிகளுக்குப் பதில் கண்ணாடி போட, அடுத்த பட்ஜெட்டிற்காகக் காத்திருக்கும் போக்குவரத்துக் கழகம், மேலும் பஸ் ஜன்னல்களை உடைத்துக் கொள்ள விரும்பாதது ஆச்சரியப்படுவதற்கில்லை.

'பஸ் ஓடாது' என்று போக்குவரத்துக் கழகம் அறிவிப்பதில் பலருக்கு ஆதாயம் இருக்கிறது. முதலாவது, இத்தனை பஸ்கள் ஒரு நாள் முழுவதும் ஓடவில்லை என்றால் எவ்வளவு டீஸல் சேமிப்பு! 'பந்த்' என்றால் பஸ் கண்டக்டர்கள், டிரைவர்களுக்குப் படு குஷிதான். வேலை செய்யாமல் களையாக ஒருநாள் சம்பளம்! அடுத்து, வீட்டு வேலைக்காரிகளுக்கு அடித்தது அதிர்ஷ்டம்! தில்லி வழக்கப்படி 'மாதச் சுட்டி' (விடுப்பு) தவிர, பஸ் கிடையாது என்ற சாக்கில் 'பந்த்' சுட்டிகள் வேறு மாதத்திற்கு ஒன்றிரண்டு நாட்கள் கிடைத்து விடுகின்றன.

அலுவலக ஊழியர்களைப் பற்றியோ கேட்கவே வேண்டாம்! பஸ் இல்லை என்பதைச் சாக்காக வைத்து, கார், ஸ்கூட்டர்களில் அலுவலகம் செல்பவர்கள் கூட பந்த் அன்று சாவகாசமாகப் பதினோரு மணி அளவில் ஆபீஸிற்குப் போய்ச் சேர்ந்தால் அதிகம். மெதுவாக எழுந்திருந்து, செய்தித்தாளில் ஒரு வரி விடாமல் படித்து முடித்து, சனி — ஞாயிறு எண்ணெய் தேய்த்துக் குளிக்கத் தவறியவர்கள் அன்று எண்ணெய் தேய்த்துக் குளித்து, தலைமுடிக்குச் சாயம் அடித்துக் கொள்பவர்கள் சாவகாசமாகச் சாயம் பூசிக் குளித்து, சாப்பிட்டு முடித்து, ஒரு குட்டித்தூக்கமும் போட்டு விட்டு 'பந்த்' அன்று கூடக் கடமை தவறாமல் அலுவலகம் செல்பவர்கள் உண்டு. இப்படி ஆடி



அசைந்து அலுவலகம் போய்ச் சேர்ந்தவர்கள் உடனே வேலையை ஆரம்பிப்பார்களா? என்றைக்கு ஆரம்பித்திருக்கிறார்கள், பந்த் அன்று அதிசயமாக வேலையைச் சுறுசுறுப்பாகத் துவங்க?

ஆபீஸ் போய்ச் சேர்ந்தவுடன் முதல் வேலையாக வீட்டில் கவலைப்படுவார்கள் என்று இவர்களாகக் கற்பனை செய்து கொண்டு, தொலைபேசியில் "சௌக்கியமாய் ஆபீஸ் வந்து சேர்ந்தேன்" என்று, ஏதோ ஊர் போய்ச் சேர்ந்தது மாதிரி தகவல் தெரிவிப்பார்கள். மற்றபடி, வெறிச்சோடிக்கிடக்கும் ஆபீஸ்களில் 'சிரமப்பட்டு' வந்திருக்கும் ஒரு சில ஊழியர்கள் கூடி, தாங்கள் வசிக்கும் காலனிகளில் முதல் நாளிலிருந்து அன்று காலை வரை நடந்த கலாட்டாக்களைப் பற்றியும், தாங்கள் வரும் வழியில் கண்ட, கேள்வியுற்ற விஷயங்களைப் பற்றியும் வர்ணித்து, 'இப்படியே போய்க் கொண்டிருந்தால் இந்த நாடு உருப்படாது' என்ற விமர்சனத்துடன் கூட்டத்தைக் கலைக்கும் பொழுது, கிட்டத்தட்ட லஞ்ச் இடைவேளை நெருங்கிவிடும். அப்போது பிற்பகல் வெளியாகும் செய்தித்தாளை வாங்கி வந்து அதை அசைபோட்டபடி மூன்று மணி வரையில் பொழுதைக் கழித்துவிட்டு 'பஸ் இல்லை, எல்லா இடங்களிலும் கலாட்டா, வீடு போய்ச் சேருவது கஷ்டம்' என்று காரணம் சொல்லி, பர்மிஷன் வாங்கிக் கொண்டு வீட்டிற்கு ஓட்டம் பிடிப்பார்கள். ஆக, பந்த் அன்று அலுவலக ஊழியர்கள் காலை பதினோரு மணியிலிருந்து மதியம் மூன்று மணி வரை ஆபீஸில் இருந்தால் அதிகம்! அதனால் சில ஊழியர்கள் பந்த் அன்று நிச்சயமாக ஆபீஸிற்கு வந்துவிடுவார்கள், நான்கு மணி நேரம் 'வேலை' செய்தால் போதுமே!

பந்த் நாளில் இன்னும் ஒரு பெரிய வசதி, புதிதாகக் கார், ஸ்கூட்டர் ஓட்டக் கற்றுக் கொள்பவர்கள், போக்குவரத்துக் கழக பஸ்கள் ஓடாத வெறிச்சோடிய தில்லி வீதிகளில், 'பந்த்' அன்று பயமில்லாமல் பயிற்சி பெற முடிகிறது.

இப்படியாக தில்லி 'பந்த்'இன் குஷிக்கும், ருசிக்கும் பழக்கப்பட்டுவிட்ட சில தில்லி வாசிகள் 'பந்த்' இல்லாத தில்லியும் ஒரு தில்லியா? என்னும் நிலைக்கு வந்துவிட்டார்கள். அதனால், இவர்கள் அடுத்த தேர்தலின் பொழுது எந்தக் கட்சி பதவிக்கு வந்தால் அதிகமாக 'பந்த்'கள் கொண்டாடப்படும் வாய்ப்பு இருக்கிறது என்பதை மனத்தில் கொண்டு அக்கட்சிக்குத் தங்கள் பொன்னான வாக்குகளை வழங்கினாலும், நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை!



"என்னப்பா சர்வர்! சாப்பாட்டுல இவ்வளவு பெரிய கல் கிடக்குது!"

"மெதுவா எடுத்துத் தரையில் வையுங்க சார், டேபிள் உடைஞ்சிடப் போகுது!"

— கொங்கணாபுரம் வே. செந்தில்.



"என்ன ஆபரேஷன் தியேட்டர்லருந்து துப்பாக்கி வெடிச்ச சத்தம் கேட்குதே!"

"மிலிட்டரி டாக்டராச்சே, யாராவது இறந்தா இராணுவ மரியாதை செலுத்துவாரு!"

— என். நாகராஜன்.



"இதப் பாருங்க சார், நீங்க பாட்டுக்குத் தலைக்கு வைச்சிருக்கிற ஃபைலை உருவற வேலையெல்லாம் வேணாம். ஃபைல் வேணும்னா எழுப்பிக் கேளுங்க, தர்றேன்!"

— என். நாகராஜன்.

# புயலுக்குப் பின்னே அமைதி

சித்தப்பா தற்செயலாக ஊர்ப் பக்கம் வர விஷயம் தெரியலாயிற்று. தெரிந்த போது சம்பவம் நடந்து நான்கு நாட்கள் ஆகியிருந்தன. உடனே இரண்டு வரி எழுதிப் போட்டிருந்தாலும் கூட நேற்று தகவல் தெரிந்திருக்கக்கூடும். சகோதரர் இருவரும் ஏன் அதைச் செய்யவில்லை? இருக்கும் அல்லலில் இவன் வேறு வந்து சங்கடப்பட வேண்டுமா என்ற எண்ணமாய் இருக்கலாம். அல்லது நம் இருவரோடு போகட்டும் என்ற பெருந்தன்மையோ என்னவோ?

இனியும் தாமதிப்பது நல்லதல்ல என்று



போட்டிக் கதை — 11

தோன்றியது. புறப்பட்டேன்.

''நானும் வரேன்...'' என்றாள் விமலா.

''நா ப்ரதர்ஸுக்கு உதவியா மூட்டிக் கொடுப்போம்னுட்டு புறப்பட்றேன்... நீ எதுக்கு?''

''நா வந்தா மன்னிக்குக் கொஞ்சம் ஆறுதலாயிருக்கும். நமக்கென்னன்னு இல்லாமே உடனே புறப்பட்டு வந்தாளேங்கிற சமாதானம் கிடைக்கும்...''

''சரி... புறப்படு...''

பஸ் ஸ்டாண்ட் அடைந்து, அடுத்த ஐந்தாவது நிமிடம் 'திருச்சி டு மதுரை' என்று போட்டிருந்த விரைவு வண்டியில் ஏறி




அமர்ந்தாயிற்று.

''பார்த்தேளா... எவ்வளவு சாமர்த்தியமா நடந்துண்டிருக்கான்னு...'' — பஸ் புறப்பட்ட போது விமலா வாயைத் திறந்தாள்.

''யாரைச் சொல்றே...?''

''உங்க தங்கை ரத்னாவைத்தான்...''

''என்ன சாமர்த்தியம்?''

''சித்தப்பாதான் சொன்னாரே... முதலிரவிலேயே அவ எல்லா விஷயத்தையும் மாப்பிள்ளைகிட்டே சொல்லிட்டாளாமே...''

''ம்.... ம்....''

''அதோடல்லாமே இதையெல்லாம் எங்க அண்ணா இரண்டு பேரும் உங்ககிட்டே முன்னமையே சொல்லலையான்னு வேறே கேட்டாளாம்? எவ்வளவு சாமர்த்தியம்?''

நான் சற்று நேரம் அமைதியானேன்.

''என்ன, தங்கையைப் பற்றிச் சொன்னவுடனே வாயடைச்சிடுத்து?''

''கொஞ்சம் மெதுவாப் பேசு விமலா... சுற்றி வர ஆட்கள் உட்கார்ந்திருக்காங்களில்லையா?''

''ஒண்ணும் காதிலே விழாது... நா கேட்டதுக்குப் பதில் சொல்லுங்கோ...''

''அவ அப்படிச் சொன்னது தப்பில்லேன்னுதான் எனக்குத் தோணுது...''

— ''அது சரி... கல்யாணம் ஆகி இருபத்து நாலு மணி நேரம் முடியலே... அதுக்குள்ளேயுமா ஒரு பெண் பிறந்த வீட்டை இப்படிக் காட்டிக் கொடுக்கும்?''

''இதிலே காட்டிக் கொடுத்தது என்ன இருக்கு?''

''என்ன இப்படி சுலபமா கேட்கறேள்?''

''எதுன்னு புரியும்படியாச் சொல்லு... பதில் சொல்றேன்...''

''எனக்கு அடிக்கடி மயக்கம் வரும்... அதுக்கு ட்ரீட்மெண்ட் எடுத்திக்கிட்டிருந்தேன்... ஒரு வருஷமா இப்போ அது இல்லே... டாக்டர்ஸ் ரிப்போர்ட்டெல்லாம் எங்க அண்ணன்மார்கள் உங்ககிட்டே காமிச்சிருப்பாங்கன்னு நினைச்சேன். உங்ககிட்டே சொல்லவேயில்லியான்னு கேட்டாளாம் புருஷன்கிட்டே. எடுத்த எடுப்பிலேயே ஒரு பொண்ணு இப்படியா நடந்துக்கும்?''

''ஒரு வகையிலே புத்திசாலித்தனமான நடவடிக்கைதான் அது...''

''காட்டிக் கொடுக்கிறது புத்திசாலித்தனமா? நல்லாயிருக்கு நீங்க சொல்றது?''

''சட்னு சங்கடப்படறதிலே அர்த்தமில்லே விமலா... கொஞ்சம் யோசிச்சிப் பாரு... இனிமே ரத்னாவுக்கு அவ புருஷன் ராகவன்தான் ஆயுசுக்கும் துணை... அவர்கிட்டே நல்ல பெயர் எடுக்கிறதும், அவரை வளைச்சுத் தன் கைக்குள்ளே போட்டுக்கிறதும்தான் அவளோட குறியாயிருக்கும்... இருக்கணும். அதுதான் நியாயமும் கூட. எந்தப் பெண்ணுக்கும் அது இயற்கை. அதை

உஷா தீபன்

அவளும் செய்திருக்கா, அவ்வளவுதான்..."

"நல்ல பெயர் எடுக்கிறது, புருஷன்கிட்டேயும், புகுந்த வீட்டார்கிட்டேயும் நடந்துக்கிற முறையிலே இருக்குதுங்க.. இனிமையாப் பேசற வகையிலும், வீட்டுக் காரியங்களை பாந்தமாச் செய்ற அழகிலேயும் இருக்கு. அப்படி இருந்தா ஓரளவு நல்ல உணர்வு உள்ள எந்தப் புருஷனும் தானா ஒரு பெண் கைக்குள்ளே வந்திடுவான்.. அதுக்கு நேர் வழிதான் முறையே ஒழிய, இந்த மாதிரி நடந்துக்கிட்டது தப்பு.. அதை ஒத்துக்குங்க..."

"இதை வேறொரு விதமாக் கூட சொல்லலாம் விமலா..."

"எப்படி?"

"மறைச்சு மறைச்சு வச்சு அன்றாடப் புழுங்கிச் சாகிறதை விட, வர்றது வரட்டும்ங்கிற துணிச்சலாயும் இருக்கலாமே...!"

"அந்த மாதிரி நினைச்சு அவ சொல்லியிருக்க முடியாதுங்க. ஏன்னா கல்யாணத்துக்கு முந்தி அடிக்கடி மயக்கம் வந்ததைப் பத்தியோ, தொடர்ந்து நாலு வருஷமா ட்ரீட்மெண்ட்லே இருந்ததைப் பத்தியோ, யார்கிட்டேயும் மூச்சு விடக் கூடாதுன்னு உங்க அப்பா ரத்னாகிட்டே சத்தியம் பண்ணச் சொல்லி வாங்கிட்டாராம்..."

"அப்படியா? இது எனக்குத் தெரியாதே..."

"உங்க அம்மாதான் சொன்னாங்க..."

"அடடா! அப்பா பேச்சையுமா மீறிட்டா? அவ்வளவுதான் மரியாதையா அவர் சொல்லுக்கு?"

"இந்தக் காலத்திலே எந்தப் பெண்டுகளைத்தான் நம்ப முடியுது?"

பேசி அலுத்தது போல் விமலா வாய் மூடியிருந்தாள். வெளியே வேடிக்கை பார்க்க ஆரம்பித்தாள்.

வண்டி ஜங்ஷன் மேம்பாலத்தைக் கடந்து ரவுண்டானாவில் வட்டமிட்டு, நிலையத்திற்குள் நுழைந்தது.

இறங்கி வெளியே வந்து ஆட்டோ பிடித்து அமர்ந்தோம். இன்னும் பத்து நிமிடத்தில் வீட்டை அடைந்து விடுவோம் என்ற நினைப்பில், எதற்காகப் புறப்பட்டு வந்தோமோ அந்தச் செய்தியைக் கேள்விப்பட்ட போது எழுந்த பயம் இப்பொழுது மீண்டும் தொற்றிக் கொண்டது.

கூடவே "கடவுளே! விபரீதமாய் எதுவும் ஆகியிருக்கக் கூடாதே...!" என்று வேண்டுதலும் செய்தது.

**வா**சலில் இருந்த அழைப்பு மணியை அழுத்த உள்ளே பட்டென்று விளக்கு எரிந்தது.

பகலிலும் மின் விளக்கு தேவைப்படும் வீடு.

"யாரு, சுந்தரமா? வா... வா... வா... யாரு சொன்னா உனக்கு விஷயத்தை?" — யூகித்துக் கேட்டவாறே வந்து கதவைத் திறந்தான் அண்ணா.

விவரத்தைச் சுருக்கமாகக் கூறினேன்.

"கல்யாணத்துக்கு மறுநாள் பத்தியானம் நீ ஊருக்குப் புறப்பட்டுப் போனேல்லையா.. அன்னிக்கே சாயங்காலம் பிடிச்சது வினை. அப்போயிருந்து இந்த நிமிஷம் வரைக்கும் நிம்மதியில்லை. ஒருவழியா எல்லாம் முடிஞ்சு இப்போதான் கொஞ்சம் கண் அயரலாம்னு கீழே சாய்ந்தேன்..."

"எல்லாம் முடிஞ்சுதுன்னா?" எனக்குத் துணுக்கென்றது.

"பயப்படறதுக்கில்லே..." இவ ரொம்ப உண்மையா நடந்துக்கிறதா நினைச்சு எல்லாத்தையும் மாப்பிள்ளைகிட்டே சொல்லிட்டா போலிருக்கு. எனக்கென்னமோ அதைச் சொல்லியிருக்க வேண்டிய அவசியமில்லேன்னுதான் தோணுது. தாராளமா கல்யாணம் பண்ணலாம்னு டாக்டரே சொன்ன பிறகுதான் செய்திருக்கோம். ஏறக்குறைய ஒன்றரை வருடம் ஆகி, எல்லா மாத்திரைகளையும் நிறுத்தியாச்சு. சுகமா, ஆரோக்கியமாத்தானே இருந்தா? அப்படியிருக்கிறபோது, கல்யாணத்துக்குப் பார்க்கிற இடத்திலே இந்தப் பெண்ணுக்கு இப்படி இருந்தது. இப்போ சுகமாயிட்டுதுன்னு யாராவது சொல்லுவாங்களா? அதுக்கு அவசியம்தான் என்ன?"

"அது மட்டுமில்லேண்ணா. அப்படியே உண்மை விளம்பியா எடுத்துச் சொன்னாலும் அதனாலென்னன்னு சம்மதிக்கிறதுக்கு எவன் இருக்கான் இந்தக் காலத்திலே? மயக்கம் வருமான்னு கேட்ட ஜோர்லேயே "ஊருக்குப் போய் லெட்டர் போடறோம்"னு எழுந்திட மாட்டாங்களா?"

"நடந்ததைக் கேளு. அன்னிக்குச் சாயங்காலம் மாப்பிள்ளையோட அண்ணா, அதான் பாரத் ஹெவி எலெக்ட்ரிகல்சலே இருக்காரே அவர் வந்தார். வாசல்லேயே நின்னபேசிக்கு "கொஞ்சம் இப்படி வர்றீங்களா"ன்னார்.

"எனக்கு சர்வமும் ஆடிப் போயிடுத்து. கொஞ்சம் வீடு வரைக்கும் வந்திட்டுப் போங்கன்னார். எதுக்குன்னேன்? வாங்கோ, கொஞ்சம் பேசணும்னு குரல் உசந்தது. சரி, அண்ணாவையும் சேர்த்து சப்போர்ட்டுக்கு இழுத்துண்டு போவோம்னு வெயிட் பண்ணினேன். கோயிலுக்குப் போயிருந்த பெரியண்ணாவும் வர, இரண்டு பேரும் போனோம். அங்கே போனா எங்க இரண்டு பேரையும் ஒரு தனி ரூம்ல வச்சு, ஆள் மாத்தி ஆள்.. நம் மாப்பிள்ளை, அவரோட பிரதர்ஸ், அவங்க வீட்டு இரண்டு மாப்பிள்ளைகள் எல்லாரும் சேர்ந்துண்டு கேள்வி மேலே

நடிகையின் தாய்: அப்படி என்னத்தைடி சொன்னே: தயாரிப்பாளர் இந்த ஓட்டம் ஓடறாரு?

நடிகை: ஒரு ஆர்ட் ஃபிலிமில நடிக்க ஆசையா இருக்குன்னு சொன்னேன்!

— பக்தவத்சலம்.



கேள்வி போட்டுத் துளைச்சு எடுத்துட்டாங்க... போ... உண்மையிலேயே சொல்றேண்டா சுந்தரம். என் வாழ்க்கையிலேயே நான் தலைகுனிஞ்ச முதல் இடம் இதுதான். குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி வச்சு, சரமாரியா அம்பு தொடுத்துட்டாங்கடா..."

"ஏண்ணா! இதுதான் உண்மை. கடந்த ஒரு வருஷத்துக்குப் மேலே அவளுக்கு எதுவும் கிடையாதுன்னு சொன்னீங்கல்லியா?"

"சொல்லாமையா... அவங்க சமாதானம் ஆனாத்தானே? நீங்க ஏன் கல்யாணத்துக்கு முன்னாலேயே சொல்லலை... அப்போ ஏமாத்தனும்ங்கிற எண்ணம் தானேன்னு ஒரே பிடியா பிடிச்சிட்டாங்க... மாப்பிள்ளையும் அதையே திருப்பித் திருப்பி... எதைப் பேசறது? இது இனிமேலும் வராதுங்கிறதுக்கு என்ன உத்தரவாதம்னு கொதிச்சுட்டாங்க போ...."

"ஆமா, ரத்னா எப்படி இருந்தா அப்போ?"

"அவளுக்கென்ன, நாங்க வந்திருக்கோமேன்னுகூடக் கண்டுக்கலே.... குத்துக்கல் மாதிரி உட்கார்ந்திருந்தா...."

"என்ன இண்ணக்கம் பார்த்தீங்களா?"

"நாங்களும் ஒரு முடிவுக்கு வந்திட்டோம் அப்போ... அன்னைக்கே டைவர்ஸ் நோட்டீஸ் அடிச்சுக் கையிலே கொடுத்திடுவாங்க போலத்தான் தோணிச்சு...."

"ஐயோ... அப்புறம்?"

"ஒரே ஒரு விஷயந்தான் நம்மளைக் காப்பாத்திச்சு?"

"என்ன அது?"

"அந்த வீடு. அங்கே உள்ள மனுஷாளெல்லாம் மூத்த அண்ணாவோட சொல்லுக்குக் கட்டுப் பட்டவா... மஹாபாரதத்திலே தர்மர் மாதிரி... அவர்தான் தலைவர். அந்த மனுஷன் வாயிலேயிருந்து எது வருதோ அதுதான் அவாளுக்கு வேதவாக்கு. அதனாலே தப்பிச்சோம்..."

"அவர் என்ன சொன்னார்?"

"எல்லாத்தையுமே கேட்டு முடிச்சா.. ஒரு பிரளயமே ஓய்ந்து கொஞ்சம் அமைதியா இருந்தபோது ரத்னா எங்க எல்லாருக்கும் காப்பியைக் கொண்டு வந்து வச்சா... அப்போ "நீ ஏம்மா குழந்தே இதை எடுத்துண்டு வர்றே... அதுதான் வீட்டிலே நிறையப்பேர் இருக்காளேன்னார்..."

இந்த வார்த்தையைக் கேட்டபோது தான் எங்க இரண்டு பேருக்குமே மூச்சு வந்தது.

"நன்னா லட்சணமா, லட்சுமிகரமாத் தான் இருக்கா. இந்தக் கொழந்தைக்கு ஏன் இந்த உபத்திரவம் ஏற்பட்டுது?"ன்னு சொல்லித் தன் பக்கத்திலே உட்கார்த்திண்டு தலையைத் தடவிக் கொடுத்தார் அந்தப் பெரியவர்.

"அப்போதான் நாங்க நினைச்சோம், ரத்னா தப்பிச்சுட்டான்னு... சுருக்கமாச் சொன்னா. அவா நம்பளைவிட நல்ல மனுஷாள்... அதனால நாம எல்லாரும் ஒரு கண்டத்திலேயிருந்து தப்பிச்சிருக்கோம்..."

ஒரு நிம்மதிப் பெருமூச்சு வெளிப்பட்டது என்னிடமிருந்து. கண்களை மூடிச் சற்று நேரம் அப்படியே அமர்ந்திருந்தேன் நான்.

"ஆண்டவனுக்கு நன்றி..."

"பெரியண்ணா எப்போ ஊருக்குப் போனான்..?

"எங்கே உடனே கிளம்ப? இங்கதான் ஒரே அமர்க்களமாப் போச்சே... நேற்றுத்தான் மனசு கொஞ்சம் பதமாகிப் புறப்பட்டுப்போனான்."

"சரி ... ... அப்போ நா கிளம்பறேன்..."

"என்னது, உடனேயேவா? ஒரு வாய் சாப்பிட்டு ரெஸ்ட் எடுத்திட்டுச் சாயங்காலத்துக்கு மேலே புறப்படலாம்."

உள்ளே அண்ணியும், விமலாவும் உரையாடிக் கொண்டிருப்பது தெரிந்தது. அண்ணிக்கு விமலாவின் மூலம் ஒரு ஆறுதல். பொழுது சாய்ந்த

போது நாங்கள் கிளம்பினோம். அண்ணா பஸ் ஸ்டாண்ட் வரை வந்தான்.

''ரத்னாவும், மாப்பிள்ளையும் என்னிக்கு டெல்லி போறாங்க?'' நான் கேட்டேன்.

''தெரியலை.... டேட் முடிவு பண்ணின பின்னாடி மெட்ராஸ் போய்த்தானே ட்ரெயின் மாறணும்... பாண்டியன்லதான் அநேகமா புறப்பட்டு வருவா.... வண்டி திருச்சியிலே நிற்குமோல்லியோ.... அப்போ வந்து பார்த்துக்கோயேன்... மெட்ராஸ் வரைக்கும் கொண்டுபோய் வழியனுப்பிட்டு வரலாம்னு இருக்கேன்.. எல்லாம் ஆண்டவன் செயல்....!''

அந்தத் தேதிக்காகக் காத்திருந்தேன் நான். எதிர்பார்த்தது போலவே கடிதமும் வரத்தான் செய்தது. தேதியைச் சுமந்தல்ல. அந்தச் செய்தியைச் சுமந்து! சாதாரணச் செய்தியா அது? இதென்ன சோதனை?

அன்புள்ள சுந்தரம்,

நான் நேரில் சொல்லியது போல் ரத்னா டெல்லி செல்லும் தேதியைக் குறிப்பிட்டு எழுத முடியாமைக்கு வருந்துகிறேன். அதற்குச் சிறிது நாள் பிடிக்கும். காரணம், நேற்று முன் தினம் நடந்த சம்பவம்தான். நீ ஊருக்குக் கிளம்பிய மறுநாள் அது நடந்தது. எது முற்றிலும் தீர்க்கப்பட்டு விட்டது என்றுநாமெல்லோரும்நம்பினோமோ அது எழும்பிவிட்டது. ரத்னா திடீரென்று கிணற்றடியில் மயக்கமாய் விழுந்திருக்கிறாள். தலையில் அடிபட, எல்லோரும் சேர்ந்து அவளை ஆஸ்பத்திரியில் அட்மிட் செய்திருக்கிறார்கள். ரத்னா ரொம்பவும் கவலையாயிருந்தாள். நான் சென்று பார்த்த பொழுது விசித்து விசித்து அழுதாள். அதைப் பார்த்தபோது கல்யாணத்துக்குப் பிந்தைய அவளது செய்கைகள் எல்லாமே அவளது கட்டுப்பாடின்றி உடல் நல பாதிப்பினால் ஏற்பட்டதோ என்று நினைக்கத் தோன்றியது எனக்கு. எந்த உண்மையை மறைக்க வேண்டுமென்று அல்லது அவசியமில்லையென்று எல்லோரும் நினைத்தோமோ, அதை அவள் வெளிப்படையாகச் சொல்லப்போக, இறைவனே அவளைத் தண்டித்து விட்டது போல் ஆகிவிட்டது. அப்பாவிடம் செய்து கொடுத்த சத்தியத்தை மீறியதற்கான தண்டனையாய்க் கருதி மிகவும் வருந்தினாள். எப்படியானாலும் இது நடந்திருக்க வேண்டாமில்லையா? கூடிய மட்டும் நான் ஆறுதல் சொன்னேன்.

மாப்பிள்ளை வீட்டார் ரொம்பவும் கவலை கொண்டிருந்தார்கள். ஆனால் கோபமில்லை. அவர்கள் நல்லவர்கள். நான் ரத்னாவுடைய பழைய மெடிக்கல் ரிப்போர்ட்களையெல்லாம் கொண்டு காண்பித்து விட்டேன். பார்த்து, ஆய்ந்து விட்டு இது அதிர்ச்சியினால் வந்ததுதான், இனி நிச்சயமாகத் தொடராது என்று டாக்டர் சொன்ன பின்னால்தான் அவர்கள் ஆறுதலடைந்தார்கள். இப்பொழுது ரத்னாவின் உடல்நிலை வெகுவாகத் தேறியுள்ளது. மாப்பிள்ளையும் அருகிலேயே இருந்து கவனித்து வருகிறார். கவலை வேண்டாம், சுந்தரம், ''ரத்னா அதிர்ஷ்டக்காரி.'' அவ்வளவுதான் என்னால் சொல்ல முடிகிறது.

இப்படிக்கு உன் அண்ணா,
ராஜாராமன்.

கடிதம் முடிந்தது.

இங்கே இன்னும் சில நல்லவர்கள் இருந்து கொண்டு இருக்கிறார்கள் என்ற சமாதானத்தில் நீண்டதொரு நிம்மதிப் பெருமூச்சு வெளிப்பட்டது என்னிடமிருந்து.


NOW ON SALE
DEC.'90 ISSUE OF
GOKULAM

- The Little Fir Tree a Christmas story
- Loki the Great a picture story
- Grandpa's Tales another tall-tale is told.
- Beware! Spider Girl! an exciting game

96 pages for just Rs. 3/-

BUY YOUR CHILD A COPY TODAY!



# Tramcoir

மிதியடிகள்



தூசிகள் இங்கு
நிறுத்தப்படுகிறது.

எல்லா **Kurl-on** டீலர்களிடமும் கிடைக்கும்.

# பாரு பாரு பபூல் வசந்தம்!









Chitra-B BLS 952 R TAM

# சிவகாமியின் சபதம்

முப்பத்தைந்தாம் அத்தியாயம்

## இரண்டாவது அரங்கேற்றம்

திருநாவுக்கரசு அடிகளுக்கு அப்போது ஏறக்குறைய ஐம்பத்தைந்து பிராயமிருக்கலாம். அப்பெருமானுடைய பொன் வண்ணத் திருமேனி முழுவதும் தூய வெண்ணீறு பூசியிருந்தது. அவருடைய கழுத்தையும் மார்பையும் ருத்திராட்ச கண்டிகைகளும் தாழ்வடங்களும் அலங்கரித்தன. சிரசிலும் கரங்களிலும் அவ்வாறே ருத்திராட்சங்கள் பொலிந்தன. காதுகளிலும் ருத்திராட்ச குண்டலங்கள் இலங்கின. இடையில் தூய வெண்துகில் உடுத்தியிருந்தார். அவருடைய திருமுகத்தில் ஞான ஒளி வீசிற்று. இறைவனை நினைந்து இடையறாது கண்ணீர் விட்ட அவருடைய கண்களில் பேரருள் ததும்பிற்று. கோயில் பிராகாரங்களில் புல் செதுக்குவதற்கான உழவாரப் படை அந்தத் தொண்டர் சிகாமணியின் திருத்தோளில் சாத்தப்பட்டிருந்தது.

திருநாவுக்கரசர் காஞ்சியில் அமைந்திருந்த சைவத் திருமடத்துக்கு அதிபராக விளங்கியபோதிலும், அவ்வப்போது ஸ்தல யாத்திரை சென்று திரும்புவது வழக்கம். தொண்டை நாட்டிலும் சோழ நாட்டிலும் உள்ள பல சிவ ஸ்தலங்களுக்கு அவர் சென்று சிவாநந்தமும் தமிழின்பமும் ததும்பும் தெய்வத் திருப்பதிகங்களைப் பாடினார். சென்ற இடங்களிலெல்லாம் ஜனங்கள் அவரைச் சிவிகையில் ஏற்றி ஊர்வலம் நடத்திச் சிறப்பாக வரவேற்றார்கள். அவர் சென்ற ஒவ்வொரு ஸ்தலத்திலும் கோயில் பிராகாரங்களில் முளைத்திருக்கும் புல்லை அவர் தம் கையில் பிடித்த உழவாரப் படையினால் செதுக்கிச் சுத்தம் செய்தார். இந்தச் சிவ கைங்கரியத்தை ஆயிரக்கணக்கான மக்கள் அதிசயத்துடன் பார்த்தார்கள். அதுமுதல் தங்கள் ஊர்க் கோயில்களைப் புதுப்பித்துச் சுத்தமாக வைத்திருக்கத் தீர்மானித்தார்கள்.

வாகீசப் பெருமானுடைய திருவாக்கினால் தத்தம் ஊரிலுள்ள கோயிலுக்கு மகிமை உண்டாக வேண்டும் என்று ஜனங்கள் விரும்பினார்கள். "எங்கள் ஊருக்கும் விஜயம் செய்ய வேண்டும். எங்கள் ஊர்க் கோயிலைப்பற்றியும் பாடியருள வேண்டும்" என்று அவரிடம் வேண்டிக் கொண்டார்கள்.

அவ்விதம் அப்பெருமான் பாடிய பாடல்களை அந்தந்த ஊர்க்காரர்கள் ஓலைச் சுவடிகளில் எழுதிக் கொண்டு பெறுதற்கரிய பேறு அடைந்ததாக எண்ணி மகிழ்ந்தார்கள்.

இத்தகைய மகிமை வாய்ந்த நாவுக்கரசர் எழுந்தருளியிருக்கும் இடங்களில் ஜனங்கள் அருளொளி விளங்கிய அவருடைய திருமுகத்தைப் பார்த்துக் கொண்டும், அவருடைய திருவாக்கிலிருந்து எப்போது, என்ன அமுத வார்த்தை வருமோ என்று ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டும் இருப்பார்கள்.

அங்ஙனமிருக்க, இன்று அவருடைய சொந்த மடாலயத்தில் அவரிடம் பக்தி பூண்டு தொண்டு செய்யும் சீடர்கள் கூட, "ஆயனர் வருகிறார்!" என்ற சொல்லைக் கேட்டதும் ஒருமுகமாக வாசற்பக்கம் திரும்பிப் பார்த்தார்கள் என்றால், அதிலிருந்து மக்களின் உள்ளத்தில்

ஆயனச் சிற்பியார் எப்பேர்ப்பட்ட இடம் பெற்றிருந்தார் என்று ஊகித்து அறியலாம்.

அங்கிருந்தோர் எல்லாரையும்விட நாவுக்கரசரின் அருகில் வீற்றிருந்த குமார சக்கரவர்த்தியின் உள்ளத்திலேதான் அதிகப் பரபரப்பு உண்டாயிற்று: 'இதோ ஆயனர் வருகிறார்!' என்ற வார்த்தைகளைக் கேட்டதும், 'ஒருவேளை அவருடன் சிவகாமியும் வருவாளோ!' என்ற எண்ணம் அவர் மனத்தில் தோன்றிக் கிளர்ச்சியை உண்டாக்கிற்று. அடுத்த கணத்தில், 'அவள் எதற்காக இங்கு வருகிறாள்?' என்ற எண்ணம் மனச்சோர்வை உண்டாக்கியது. இவ்விதம் அவர் மாறி மாறிக் கிளர்ச்சியும் சோர்வும் அடைவது அதிக நேரம் நீடித்திராதபடி இதோ ஆயனர் வாசற்படியண்டை வந்து விட்டார்! — ஆகா! இது என்ன 'ஜல் ஜல்' சத்தம்; பாதசரத்தின் ஒலிபோல் இருக்கிறதே! அதோ, ஆயனருக்குப் பின்னால் வரும் பெண்? சந்தேகமென்ன? சிவகாமியேதான்!

குமார சக்கரவர்த்தியின் கண்கள் சிவகாமியின் முகத்தை நோக்கின. சிவகாமியின் கண்களும் முதன் முதலில் மாமல்லரின் ஆவல் ததும்பிய கண்களைத்தான் சந்தித்தன. வாடியிருந்த சிவகாமியின் முகத்தில் ஒரு கணம் புது மலர்ச்சி காணப்பட்டது. ஆனால், ஒரு கண நேரந்தான்! அடுத்த கணத்தில் அந்தச் செந்தாமரை முகத்தில் எள்ளும் கொள்ளும் வெடித்தன. தலைகுனிந்து பூமியை நோக்கிய வண்ணம் சிவகாமி தன் தந்தையைப் பின் தொடர்ந்து அந்த மண்டபத்திற்குள்ளே நுழைந்தாள்.

நயன பாஷையில் நடைபெற்ற மேற்படி நாடகத்தை வேறு யாரும் கவனியாத வண்ணம் மண்டபத்துக்குள் அப்போது பெருங் கலகலப்பு ஏற்பட்டிருந்தது.

பணிவுக்குப் பெயர்போன நாவுக்கரசர் பெருமான், ஆயனர் மண்டபத்துக்குள்ளே நுழைந்ததும் தாமும் ஆசனத்தை விட்டு எழுந்து நாலு அடி நடந்து எதிர்கொண்டு, "வரவேணும்! சிற்ப சக்கரவர்த்தியே! வரவேணும்!" என்று உபசரித்து அழைத்தார். ஆயனர் இதைக் கண்டதும்விரைந்துமுன்னால்வந்து "அபசாரம்! அபசாரம்!" என்று கூறிக் கொண்டே திருநாவுக்கரசரின் திருப்பாதங்களில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார்.

நாவுக்கரசர் ஆசனத்தைவிட்டு எழுந்தபோது அவருடன் எழுந்த சீடர்கள், நாவுக்கரசரும் ஆயனரும் அமர்ந்த பிறகு தாங்களும் தத்தம் இடத்தில் உட்கார்ந்தார்கள்.

எல்லாரும் உட்கார்ந்த பிறகும் சிவகாமி மட்டும் ஆயனருக்குப் பின்னால் தலைகுனிந்த வண்ணம் நின்று கொண்டிருந்தாள். அப்போதுதான் அவளைப் பார்த்த நாவுக்கரசர், "ஆகா! இந்தப் பெண் யார், ஆயனரே? தங்கள் குமாரி சிவகாமியா?" என்று கேட்க, ஆயனர், "ஆம், அடிகளே! தங்களைத் தரிசிக்கப் போகிறேன் என்று சொன்னபோது சிவகாமி 'நானும் வருகிறேன்' என்றாள்! அழைத்துக் கொண்டு வந்தேன்" என்றார்.

"மிக்க சந்தோஷம். உங்கள் குமாரியைப் பார்க்கவேண்டுமென்று நானும் மிக்க ஆவலாயிருந்தேன். நடனக் கலையில் அவள் அடைந்திருக்கும் அபூர்வத் தேர்ச்சியைப் பற்றிக் கேள்விப் பட்டேன். சமீபத்தில் அரங்கேற்றம் நடந்ததாமே? நான்தான் அச்சமயம் இல்லாமற் போய் விட்டேன்" என்று நாவுக்கரசர் கூறினார்.

"எனக்கும் அது மிக வருத்தமாயிருந்தது, சுவாமி! அன்று சிவகாமியின் நடனத்தைப் பார்த்துவிட்டு ருத்ராச்சாரியார் பிரமித்துப் போய்விட்டார். சிற்பம், சித்திரம், சங்கீதம் ஆகிய கலைகளுக்கெல்லாம் நடனக்கலைதான் ஆதாரம் என்பதை அன்றைக்குத்தான் அவர் ஒத்துக் கொண்டார். 'சிவகாமியின் நடனத்தைப் பார்த்த பிறகு, 'சங்கீதக் கலையில் நான் கற்க வேண்டியது இன்னும் எவ்வளவோ இருக்கிறதென்பதை அறிந்தேன்' என்று சபை நடுவில் வாய்விட்டுச் சொன்னார்."

இவ்விதம் ஆயனர் கூறியபோது அவருடைய குரலிலும் முகத்திலும் பெருமிதம் கொந்தளித்தது.

அப்போது வாகீசர், "ஆயனரே! சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் ஆகிய தெய்வக் கலைகளுக்கு ஆதாரமும் நடனந்தான்! அண்ட பகிரண்டங்களையெல்லாம் படைத்துக் காத்து அழிக்கும் பெருமான் தில்லைச் சிற்றம்பலத்தில் ஆனந்த நடனம் பயில்கிறார் அல்லவா?" என்று திருவாய் மலர்ந்தார்.

இதுவரை மௌனமாக இருந்த குமார

சக்கரவர்த்தி ''சுவாமி! நடராஜப் பெருமானின் ஆனந்த நடனத்தைப் பற்றிய தங்களுடைய பாடல் ஒன்றுக்கு, அன்று ஆயனர் மகள் அபிநயம் பிடித்தாள்; தாங்கள் அதை அவசியம் பார்க்க வேண்டும்!'' என்றார்.

''ஆம், சுவாமி! தங்களுடைய மூன்று திருப்பாடல்களுக்குச் சிவகாமி அபிநயம் பிடிப்பதாயிருந்தாள். ஆனால், ஒரு பாடலுக்குத்தான் அபிநயம் பிடிக்க முடிந்தது. அரங்கேற்றம் நடுவில் நின்ற செய்தி கேட்டிருப்பீர்களே!'' என்று ஆயனர் கூறியபோது, அதனால் ஏற்பட்ட வருத்தம் இன்னும் அவருக்குத் தீரவில்லையென்று தோன்றியது.

''கேள்விப்பட்டேன், ஆயனரே! யுத்தத்தினால் சிவகாமியின் அரங்கேற்றம் மட்டுந்தானா தடைபட்டது? இன்னும் எத்தனையோ காரியங்கள் தடைபடும் போலிருக்கின்றன. உம்மை நான் அழைத்த காரியங்கூட அப்படித்தான்!'' என்று வாகீசப் பெருமான் கூறினார்.

''சுவாமி! என்ன காரியமாக என்னை வரச்சொல்லிப் பணித்தீர்கள்?'' என்று ஆயனர் கேட்டார்.

''நமது திருமடத்தை இந்த ஏகாம்பரர் சந்நிதியிலிருந்து திருமேற்றளிக்குக் கொண்டு போக வேண்டுமென்று விரும்பினேன். இந்த இடம் நகரின் மத்தியில் இருப்பதால் கல்வி பயிலும் மாணாக்கர்களுக்கு உகந்ததாயில்லை. ஆனால் திருமேற்றளியில் அமைதி குடிகொண்டிருக்கிறது. கோயிலைச் சுற்றியுள்ள நந்தவனத்தில்மல்லிகைமலர்களும்கொன்றை மலர்களும் பூத்துக் குலுங்குகின்றன. சந்தடி கூச்சல் ஒன்றும் கிடையாது. இறைவனைத் துதிப்பதற்கும் தமிழ் பயில்வதற்கும் திருமேற்றளி தக்க இடம்.''

''பெருமானே! திருமேற்றளி இறைவன் மீது பாடல் ஏதாவது பாடப் பெற்றதோ?" என்று ஆயனர் கேட்க, நாவுக்கரசர் தமது சீடர்களைப் பார்த்தார். உடனே ஒரு சீடர் திருமேற்றளிப் பதிகத்திலிருந்து பின் வரும் பாடலைப் பாடினார்: —

"செல்வியைப் பாகங்கொண்டார்
    சேந்தனை மகனாக் கொண்டார்
மல்லிகைக் கண்ணியோடு
    மாமலர்க் கொன்றை சூடிக்
கல்வியிற் கரை யிலாத
    காஞ்சிமா நகர்தன் னுள்ளார்
எல்லியல் விளங்க நின்றார்
    இலங்குமேற் றளிய னாரே!''

மேற்கண்ட பாடலைச் சீடர் இனிய குரலில் உருக்கமாய்ப் பாடி வந்தபோது, நாவுக்கரசர் பெருமானின் கண்களில் நீர்



ததும்பி நின்றது. திருமேற்றளிக் கோயிலில் மல்லிகையும் கொன்றை மலரும் சூடிச் சூரியனைப்போல் ஜோதி மயமாக விளங்கிய சிவ பெருமானை, மீண்டும் அகக் கண்ணால் அவர் நேருக்கு நேரே தரிசித்துப் பரவசமடைந்தவராகத் தோன்றினார். அந்தக் காட்சியை அங்கிருந்த மற்றவர்கள் பார்த்துப் பரவச மடைந்திருந்தார்கள்.

பாடல் முடிந்து சிறிது நேரம் வரையில் மௌனம் குடி கொண்டிருந்தது. பின்னர், நாவுக்கரசர் பரவச நிலை நீங்கித் தம்மைச் சுற்றியிருந்தவர்களைப் பார்த்தார். உடனே ஆயனர், ''அடிகளே! தாங்கள் உண்மையிலேயே நாவுக்கரசர்தான். தங்களுடைய திருவாக்கு அப்படி மகிமை வாய்ந்திருக்கிறது. தங்களுடைய பாடலில் இடம் பெற்று விட்டபடியால் இந்தக் காஞ்சி நகருக்கும் இதிலுள்ள திருமேற்றளிக்கும் இனி அழிவென்பதே இல்லை. தங்கள் விருப்பத்தின்படி திருமேற்றளியில் மடாலயத் திருப்பணியை மேற்கொள்ளச் சித்தமாயிருக்கிறேன். ஆனால் துறைமுகப் பட்டினத்தில் ஒரு முக்கியமான திருப்பணியைத் துரிதமாகச் செய்து முடிக்கும்படி சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். எதை முதலில் செய்வது என்று குமார சக்கரவர்த்தி ஆக்ஞை இடவேண்டும்'' என்று கூறி, மாமல்லரை நோக்கினார்.

ஆயனருடைய கேள்விக்கு மாமல்லர் மறுமொழி கூறுவதற்குள், நாவுக்கரசர் சொல்லுவார்: ''அதற்கு இப்போது அவசியமேயில்லை. சிற்பியாரே! தாங்கள் வரும்போதுதான் சக்கரவர்த்தியின் அபிப்பிராயத்தை மாமல்லர் எனக்குத் தெரிவித்துக் கொண்டிருந்தார். யுத்தம் முடியும் வரையில் என்னைச் சிஷ்யர்களுடன் சோழ நாட்டிலும் பாண்டிய நாட்டிலும் உள்ள ஸ்தலங்களைத் தரிசித்து வரும்படி சக்கரவர்த்தி யோசனை கூறியிருக்கிறார். எனக்கும் வெகு காலமாக அந்த ஆசை உண்டு. காஞ்சிக் கோட்டை ஒரு வேளை பகைவர் முற்றுகைக்கு இலக்கானாலும் ஆகலாம். அம்மாதிரி சமயங்களில் என் போன்ற துறவிகள் விலகியிருப்பதே நல்லது.''

இவ்விதம் நாவுக்கரசர் கூறியதைக் கேட்ட நரசிம்மவர்மர் ''அடிகளே! தாங்கள் இப்போது கூறிய அபிப்பிராயம் போற்றத் தக்கது. அந்தச் சமண முனிவர்களும் புத்தபிக்ஷுக்களும் ஒப்புக் கொண்டு அரசியல் விஷயங்களில் தலையிடாமல் நடந்து கொண்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்?'' என்றார்.

'புத்த பிக்ஷு' என்ற வார்த்தையைக் கேட்டதும் ஆயனருக்குச் சுருக்கென்றது. அதோடு பரஞ்சோதியைப்பற்றிய நினைவும் வந்தது. ''அடிகளே! ஒரு விஷயம் தெரிவிக்க மறந்து விட்டேன். தங்களுடைய மடாலயத்தில் சேர்ந்து தமிழ் கற்பதற்காக ஒரு பிள்ளை சோழநாட்டில் திருச்செங்காட்டாங்குடியிலிருந்து வந்தான். திருவெண்காட்டு நமசிவாய வைத்தியரிடமிருந்து தங்களுக்கும் எனக்கும் அவன் ஓலை கொண்டு வந்திருந்தான். சித்திரக்கலை சம்பந்தமான ஒரு மகா இரகசியத்தை அறிந்து வருவதற்காக அவனை வடக்கே ஸ்ரீபர்வதத்துக்கு அனுப்பியிருக்கிறேன்.''

''அவ்வளவு தூரமா அனுப்பியிருக்கிறீர்கள்? அங்கேயெல்லாம் யுத்தம் நடக்கும் இடமாயிற்றே? சிறு பிள்ளை என்று சொன்னீர்கள்?'' என்று நாவுக்கரசர் சிறிது கவலையுடன் கேட்டார்.

''சிறு பிள்ளையாயிருந்தாலும் மகா வீரன் சுவாமி!'' என்று ஆயனர் கூறி, அரங்கேற்றத்தன்று மதயானை மீது அவன் வேல் எறிந்ததைக் கூறி விவரித்தார்.

கடைசியாக, ''பரஞ்சோதி திரும்பி வந்ததும் உடனே தங்களிடம் அனுப்பி விடுகிறேன், சுவாமி!'' என்றார் ஆயனர்.

''வேண்டாம் ஆயனரே! அவன் திரும்பி வரும்போது நான் எங்கே இருப்பேனோ, தெரியாது. எப்போது அவன் உங்கள் தொண்டில் ஈடுபட்டானோ, உங்களுடைய சீடனாகவே இருக்கட்டும். சிற்பக் கலை பயிலும் பேறு இலேசில் கிடைக்கக் கூடியதா? என்றும் அழிவில்லாத ஈசனுக்கு என்றும் அழியாத கற்கோயில்களை அமைக்கும் கலையைக் காட்டிலும் சிறந்த கலை உலகில் வேறென்ன உண்டு...?''

ஆயனர் அப்போது குறுக்கிட்டு, ''அடிகளே! சிற்பக்கலையைக் காட்டிலும் சிறந்த கலை வேறொன்று இருக்கிறது. எங்களுடைய கற்கோயில்கள் சிதைந்து உருத்தெரியாமல் அழிந்து போகலாம். ஆனால் தங்களுடைய கவிதைக் கோயில்களுக்கு ஒரு நாளும் அழிவில்லை; கற்பகோடி காலம் அவை நிலைபெற்றிருக்கும்'' என்றார்.

அப்போது குமார சக்கரவர்த்தி, ''சற்று முன்னால் பேசி முடிவு செய்ததை இரண்டு பேரும் மறந்துவிட்டீர்களே?

எல்லாக் கலைகளுக்கும் ஆதாரம் நடனக் கலையல்லவா?'' என்று சொல்லவே, அங்கிருந்த எல்லாருடைய முகத்திலும் புன்னகை பூத்தது. ஆனால், சிவகாமி மட்டும் குனிந்த தலை நிமிராமலிருந்தாள்.

நாவுக்கரசர், ''நல்லது, குமார சக்கரவர்த்தி! நாங்கள் மறந்து தான் போய் விட்டோம்! எல்லாக் கலைகளுக்கும் ஆதாரம் நடனக் கலைதான். தில்லையம்பலத்தில் ஆடும் பெருமான் முன்னால் நிற்கும் போது உள்ளமானது பொங்கிக் கவிதை வெள்ளமாய் வருவது போல் மற்ற மூர்த்தங்களுக்கு முன்னால் நிற்கும் போது வருவதில்லை!'' என்று கூறி விட்டு, ஆயனரைப் பார்த்து, ''சிற்பியாரே! தங்கள் புதல்வியின் நடனத்தை நான் பார்க்க வேண்டாமா? தென்னாட்டுக்கு யாத்திரை சென்றால் திரும்பி எப்போது வருவேனோ தெரியாது. நாடெல்லாம் புகழும் சிவகாமியின் நடனக் கலையைப் பார்க்காமல் போக எனக்கு மனமில்லை. ஒரே ஒரு பாடலுக்கு அபிநயம் பிடித்துக் காட்டினாலும் போதும்!" என்றார்.

ஆயனர், ''சுவாமி! சிவகாமிக்கு அத்தகைய பாக்கியம் கொடுத்து வைக்க வேண்டுமே?'' என்று கூறி, தமக்குப் பின்னாலிருந்த சிவகாமியைத் திரும்பிப் பார்த்தார். அவள் முகமலர்ச்சியின்றித் தலை குனிந்த வண்ணம் இருப்பதைக் கண்டதும் ஆயனருக்குச் சிறிது வியப்பு உண்டாயிற்று.

இதையெல்லாம் கவனித்த மாமல்லர், ''ஒருவேளை நான் இங்கு இருப்பதால் சிவகாமி ஆட விரும்பாமலிருக்கலாம். சுவாமி விடை கொடுங்கள்! போய் வருகிறேன்!'' என்று நாவுக்கரசரைப் பார்த்துக் கூறினார்.

இந்த வார்த்தை காதில் விழுந்ததும்! சிவகாமி பளிச்சென்று துள்ளி எழுந்து, நடனத்துக்கு ஆயத்தமாக நின்று, ''அப்பா! எந்தப் பாடலுக்கு அபிநயம் பிடிக்க வேண்டும்?'' என்று கேட்டது, அழகிய மான்குட்டி ஒன்று குயிலின் குரல் பெற்று, அமுதத் தமிழ் மொழியில் மழலை பேசுவது போல் தொனித்தது.

''பூவணத்துப் புனிதனார்' முதலில் தோன்றட்டுமே!'' என்று ஆயனர் பெருமிதம் தோன்றக் கூறினார்.

நாவுக்கரசர், கலை அரசர், இளவரசர் ஆகிய மூன்று மன்னர்களின் முன்னிலையில் சிவகாமியின் நடனக் கலை அரங்கேற்றம் இரண்டாவது முறை ஆரம்பமாயிற்று.

மந்த மாருதத்தில் மிதந்து வரும் தேன் வண்டின் ரீங்காரம் போன்ற குரலில் சிவகாமி பின்வரும் திருத்தாண்டகத்தைப் பாடிக் கொண்டு, அதன் பொருளுக்கேற்ப அங்கங்களின் சைகைகளினாலும் முகபாவத்தினாலும் அபிநயம் பிடித்தாள். பாடலில் ஒவ்வொரு வரியிலும், 'தோன்றும்' 'தோன்றும்' என்று வந்தபோது, சிவகாமியின் பாத சரங்கள் 'ஜல், ஜல்' என்று தாளத்துக் இசைய ஒலித்தன.

**''வடிவேறு திரிசூலம்**
**தோன்றும் தோன்றும்**
**வளர்சடைமேல் இளமதியம்**
**தோன்றும் தோன்றும்**
**கடியேறு கமழ்கொன்றைக்**
**கண்ணி தோன்றும்**
**காதில்வெண் குழைதோடு**
**கலந்து தோன்றும்**
**இடியேறு களிற்றுரிவைப்**
**போர்வை தோன்றும்**
**எழில்திகழும் திருமுடியும்**
**இலங்கித் தோன்றும்**
**பொடியேறு திருமேனி**
**பொலிந்து தோன்றும்**
**பொழில்திகழும் பூவணத்தெம்**
**புனிதனார்க் கே.''**

இந்தத் தெய்வீகமான பாடலைப் பாடிக்கொண்டு சிவகாமி அதன் பொருளுக் கேற்ப அபிநயம் பிடித்த போது, அங்கிருந்தவர்கள் எல்லாரும் தங்களை மறந்தார்கள். தாங்கள் இருக்குமிடத்தை மறந்தார்கள். அங்கு நடப்பது என்ன என்பதையும் மறந்தார்கள்.

சற்று முன்னால் நாவுக்கரசரின் சீடர் பாடியபோது அவர்களுடைய செவிகளில் இனிய தமிழ்ச் சொற்கள் நின்றன. அவர்களுடைய கண்கள் நாவுக்கரசரை நோக்கின. அப்பாடலை அவர் அநுபவித்து உருகுவதைப் பார்த்து அவர்கள் மனமும் கசிந்தன.

சிவகாமி அபிநயம் பிடித்தபோதோ அவர்களுடைய கண்கள் நாவுக்கரசரை நோக்கவில்லை. குமார சக்கரவர்த்தியையோ, ஆயனச் சிற்பியாரையோ அவர்கள் காணவில்லை. அந்த மடாலயத்தின் சுவர்களோ, தூண்களோ, அவற்றில் அமைந்திருந்த சிற்பங்களோ, சித்திரங்களோ அவர்கள் கண்ணில் படவேயில்லை.

அவர்கள் கண் முன்னால் பாடி ஆடி அபிநயம் பிடித்துக் கொண்டிருந்த சிவ

நீங்கள் ஏதேனும் இன்சுலேட்டட் பாத்திரம், அதனுள் இருக்கும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கன்டெய்னர் இவைகளை நன்கு பரிசோதிக்காது வாங்கினால் உங்கள் குடும்பத்தினருக்கு "ஃபுட் பாய்ஸனிங்" ஏற்படக் கூடும் — துரு கலந்த சாம்பாரையும், அரித்துப்போன ஸ்டீல் கலந்த காய்கறிகளையும் சாப்பிட்டு.


காஸரோல் 4 அளவுகளில் கிடைக்கிறது

## மில்ட்டனில் சேலம் ஸ்டீல் உள்ளது — இது பாய்ஸன்-ப்ரூஃப் ஆகும்.

பெரும்பாலான இன்சுலேட்டட் பாத்திர தயாரிப்பாளர்கள் மட்டரக ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் மாற்றுப்பொருளை உபயோகிக்கின்றனர். அதன் விளைவாக "ஃபுட்-பாய்ஸனிங்" ஏற்படக்கூடும். சில தயாரிப்பாளர்கள் சேலம் ஸ்டீல் உபயோகிப்பதாகக் கூறுவது கன்டெய்னர்களுக்கு மட்டும்தான். டிஃபின்களின் மூடிகளுக்கு உபயோகிப்பதில்லை.


ஷெரிப் மற்றும் செலேட்டர்

ஆனால் மில்டன் பாத்திரங்களில் கன்டெய்னர், மூடி இரண்டுமே நிச்சயமாக ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கொண்டு தயாரிக்கப்படுகின்றன.

வாழ்நாள் முழுதும் துருப் பிடிக்காமல், அரித்துப் போகாமல் இருக்கும் ஸ்டீல் இது ஒன்றுதான். தவிர "ஸ்டீல் அத்தாரிடி ஆஃப் இந்தியா" மற்றும் "அமெரிக்கன் அயர்ன் அண்ட் ஸ்டீல் இன்ஸ்டிட்யூட்" மூலம் நிர்ணயிக்கப்பட்ட தரத்தின்படி உருவானது இந்த ஸ்டீல் மட்டுமேயாகும்.

அதாவது உணவு வைப்பதற்கு மில்ட்டன் வழங்கும் ஒவ்வொரு ஸர்வெட் மற்றும் ஒவ்வொரு டிஃபின் பாத்திரமும் உங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமாகும்.


கரிபோ, ஷிராஸ் மற்றும் செலெட்டர்

## மீண்டும் சூடாக்கத் தேவையில்லை — அதனால் ஊட்டச்சத்து கூடுதலாக கிடைக்கிறது.

நீங்கள் உணவை மீண்டும் சூடாக்கும் ஒவ்வொரு முறையும் சில ஊட்டச் சத்துக்கள் விரயமாகின்றன. மில்ட்டன் இன்சுலேட்டட் பாத்திரம் இருக்கையில் உணவை மீண்டும் சூடாக்க வேண்டிய அவசியமே இல்லை.

உண்மையில் மில்ட்டன் ஸர்வெட், டிஃபின் ஒவ்வொன்றிலும் தடிமனான 12 மி.மீ. 'தெர்மில்' அடுக்குகள் உள்ளன. இப்போதுள்ள இன்சுலேட்டிங் பொருட்களில் அனைத்திலும் ஆற்றல் மிக்கதாகும் 'தெர்மில்'. இது உங்கள் உணவை தொடர்ந்து பலமணி நேரங்களுக்கு சூடாக வைக்கிறது. இதனால் உங்கள் குடும்பத்தினருக்கு சாதம், சாம்பார், அல்லது காய்கறிகளின் ஒவ்வொரு கவளத்திலும் அதிகப் புரதம், அதிக கார்போஹைட்ரேட் மற்றும் அதிக வைட்டமின் கிடைக்க முடியும்.

அதுமட்டுமல்ல. மில்டன் ஸர்வெட் மற்றும் டிஃபின் உங்களது க்யாஸ் செலவிலும் சேமிப்பு ஏற்படுத்துகின்றன. காரணம் நீங்கள் க்யாஸை உணவு தயாரிப்பதற்காக ஒரு முறை மட்டுமே உபயோகிக்கிறீர்கள். மீண்டும் மீண்டும் சூடாக்குவதற்கு அல்ல.

இப்போது நீங்கள் மிகச்சிறந்த ஸர்வெட் மற்றும் டிஃபின் வாங்க வேண்டுமெனில் அருகிலுள்ள மில்ட்டன் டீலரிடம் செல்லுங்கள். உணவு விஷயத்தில் அஜாக்கிரதையாக இருப்பது குடும்பத்தினரின் வாழ்விற்கே உலைவைக்கக்கூடும்.


லிக்கர் கூலர் மற்றும் பாக்




மில்டன் வாங்குவீர். குவாலிட்டி பெறுவீர்

Enterprise/MP/30/Tm.



## அருள்வாக்கு

இப்போது ஆசைப்படுகிறபடி எல்லோருக்கும் ரொம்ப வசதி, சௌகரியம் பண்ணித் தருவது என்பது, முடிவேயில்லாமல் துராசைகளைப் பெருக்கி விடுகிற ஏற்பாடுதான்.

முதலில் வெறும் குடிசை; அப்புறம் ஓடு போட்டது; அப்புறம் சிமெண்ட் சுவர், ஓட்டுக் கட்டடம்; அதற்கப்புறம் சிமெண்டிலேயே இன்னும் நைஸ் ரகங்கள்; சாணி போட்டு மெழுகின தரை காரையாகி, ஸிமெண்டாகி, அப்புறம் 'மொஸைக்', அதைவிட இன்னும் வழுவழுப்பான ரகம் என்று மாறிக் கொண்டேயிருக்கிறது. இதற்கு முடிவே இராது. துணியை எடுத்துக் கொண்டாலும் நாளுக்கு நாள் புதுப்புது தினுசுகள். எல்லாவற்றையும் வாங்கியாக வேண்டும். இப்போது இருப்பதே சௌகரியமாக இருந்தாலும் நம்முடைய புத்தி சாதுர்யத்தால், இதைவிடச் சௌகரியமான சாதனங்களைக் கண்டுபிடித்துக் கொண்டே போய், எப்போதும் நாம் இருப்பது அசௌகரியம்தான் என்று ஆக்கிக் கொண்டு, அதைவிடச் சௌகரியத்திற்காகத் தவிப்போம். திருப்தியோ நிம்மதியோ இல்லாமல் மேலே மேலே ஸம்பாதனம் பண்ணிக் கொண்டேதான் போவோம். நெருப்பிலே பெட்ரோலை விட்டு அணைத்து விடலாம் என்று நினைக்கிற மாதிரிதான், புதுப்புது ஸாதனங்களைக் கண்டுபிடித்து, ஆசையைப் பூர்த்தி செய்து கொண்டுவிடலாம் என்று நினைப்பது.

இது நம் பூர்விகர்களான மஹரிஷிகளுக்கு நன்றாகத் தெரியும். அதனால்தான் மநுஷ்யர்களின் அத்தியாவசியத் தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ளுவதற்கு அதிகமாகப் போகவே கூடாது என்று வைத்தார்கள். ஸமீப காலத்தில் காந்தி இதையேதான் வற்புறுத்திச் சொல்லிக் கொண்டிருந்தார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

---

காமியைக்கூட அவர்கள் பார்க்கவில்லை!

பின் அவர்கள் யாரை அல்லது எதனைப் பார்த்தார்கள்?

சாக்ஷாத் சிவபெருமானையே தங்கள் கண் முன்னால் தத்ரூபமாக நேருக்கு நேரே பார்த்தார்கள்!

அவருடைய கரத்தில் தோன்றிய திரிசூலத்தையும், அவருடைய சடையிலே இயங்கும் இளமதியையும் பார்த்தார்கள்.

அவருடைய திருமிடற்றில் கொன்றை மாலையைப் பார்த்தார்கள். காதிலே குழையைப் பார்த்தார்கள்.

திருநீறு பொழியும் திருமேனி முழுவதையும் பார்த்தார்கள்.

அந்தத் தெய்வீகக் காட்சியில் தங்களை மறந்தார்கள். இந்தப் பூவுலகையே மறந்தார்கள். பூவுலகிலிருந்து கைலாசத்துக்கு அவர்கள் போய்விட்டார்கள்.

பாட்டும் அபிநயமும் நின்ற சிறிது நேரத்துக்குப் பிறகுதான் எல்லாரும் சுய உணர்வு பெற்றுப் பூவுலகிற்கு வந்து சேர்ந்தார்கள்.

சுய உணர்ச்சி தோன்றியதும், அனைவருடைய கவனமும் இயல்பாக நாவுக்கரசர்பால் சென்றது. அவருடைய கண்களிலிருந்து கண்ணீர் ஆறாய்ப் பெருகி, வெண்ணீறு அணிந்த திருமேனியை நனைத்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

இத்தனை நேரமும் பாவனைக் கண்ணால் தாங்கள் தரிசித்துக் கொண்டிருந்த சிவபெருமான் இந்த மகான்தானோ என்று அவர்களில் பலர் எண்ணினார்கள்.

சற்று நேரத்துக்கெல்லாம் நாவுக்கரசர் தழுதழுத்த குரலில், "ஆயனரே! திருக்கயிலையில் வீற்றிருக்கும் எம்பெருமானைத் தங்கள் குமாரி எங்கள் முன்னால் பிரத்தியட்சமாகத் தோன்றச் செய்து விட்டாள்!" என்றார்.

ஆயனர் தம் கண்களில் ஆனந்தக் கண்ணீர் ததும்ப, "எல்லாம் தங்கள் ஆசீர்வாதந்தான், சுவாமி!" என்று கூறி, சிவகாமியைப் பார்த்து, "இன்னும் ஒரு பாட்டுக்கு அபிநயம் பிடிக்கிறாயா, அம்மா! இது அகத்துறைப் பாடலாக இருக்கட்டுமே!" என்றார்.

(தொடரும்)

# தயிர் சரியாக உறையா விட்டால் பால் மீது குறை கூறுவீர்களா




அநேக இல்லத்தரசிகள், தயிர் சரியாக உறையாவிட்டால் பாலின் மீது குறை கூறுவார்கள். ஒரே சீராக இல்லையென்றோ, தரத்தைப் பற்றியோ குறை கூறுவார்கள். எப்போதும் பால் ஒரு சீராக இருப்பதற்கும், சிறந்த தரத்துடன் இருக்கவும் தினமும் அமுல் மில்க் பவுடர் உபயோகியுங்கள்.

அமுல் மில்க் பவுடர் கொண்டு நீங்கள் தூய்மையான ஆடை நிறைந்த பாலை நொடியில் தயாரித்து விடலாம். அப்படியே அருந்தலாம். தேனீர், காப்பி, தயிர், மோர், பாயசம், கஸ்டர்ட், கேக், ரஸகுல்லா... எது வேண்டுமோ தயாரிக்கலாம்.

Amul MILK POWDER

## அமுல் மில்க் பவுடர்

**வீட்டினுள் இயங்கும் ஒரு பால்பண்ணை.**




விற்பனைக்கு விடுப்போர் : குஜராத் கோ-ஆப்பரேடிவ் மில்க் மார்க்கெடிங் ஃபெடரேஷன் லிட்., ஆனந்த் 388 001



# ஒளியேற்றும் விழா

-ஆனந்தி-

திருஞானசம்பந்தர் தல யாத்திரை சென்ற போது, ஒரு முதியவரைப் பார்த்து, ''அருணாசலம் எவ்வளவு தூரம்?'' என்று கேட்டார். ''அதிகதூரமில்லை, நான் தினமும் அருணாசலேசுவரர் பூஜைக்காகப் பூப்பறிக்கவே இங்கே வருகிறேன். என்னுடன் வா, அழைத்துப் போகிறேன்'' என்றார் முதியவர். போகும் வழியில் குழந்தை ஞான சம்பந்தனுக்குக் கதைகள் கூறினார்.

●● பிரும்மாவுக்கும் விஷ்ணுவுக்கும் இடையே, 'யார் பெரியவர்' என்று யுத்தம் தொடங்கிய போது, உலகங்களே கிடுகிடுக்க ஆரம்பித்தன. சர்வ நாசத்தைத் தடுக்க விரும்பிய சிவபெருமான், நெருப்புமயமான தூணாக நின்றார். அதன் அடியையும் முடியையும் காணப் புறப்பட்ட பிரும்மாவும் விஷ்ணுவும் தோல்வியுற்றுத் திரும்பினார்கள். கர்வம் அடங்கிச் சிவனைத் துதித்தார்கள். ஈசன் காட்சியளித்த போது ''நீங்கள் ஜோதி மலையாக இங்கேயே இருக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள். அந்த மலையே அருணாசலம்.

●● இந்த இடத்தில் உமாதேவி கௌதமரின் ஆசிரமத்தில் இருந்து தவம் செய்தாள். அப்போது மகிஷாசுரன் கொடுமை தாங்காத தேவர்கள், அம்பிகையைச் சரண் புகுந்தனர். உமையும் துர்க்கையாக மாறி, மகிஷனை வதம் செய்து, அவன் சிரம் மீது நர்த்தனம் செய்தாள். அப்போது அசுரன் கழுத்தில் ஒரு லிங்கம் இருப்பதைக் கண்டு திகைத்தாள் தேவி. அதைக் கையில் எடுக்கவும் அது கையோடு ஒட்டிக் கொண்டது. கௌதமரிடம் ஓடிச் சென்று, ''சிவபக்தனைக் கொன்றேனே!'' என்று துக்கப்பட்டாள் மகிஷாசுரமர்த்தினி. கௌதமர், ''அது அவனுக்குள்ள சாபம்; வருந்தாதே!'' என்று ஆறுதல் கூறி, ''மலையை வலம் வந்து ஈசன் அருளைப் பெறுவாயாக'' என்றார். அவ்வாறே பக்தியோடு பார்வதி அருணாசலத்தை வலம்வர, கார்த்திகை மாதம் கிருத்திகை நட்சத்திரத்தில் உமையம்மைக்குத் தேவநேசன் தரிசனம் தந்தார். ''நாம் இருவரும் பிரியாத நிலையைத் தர வேண்டும்'' என்று தேவி பிரார்த்திக்க, சிவபெருமான், உமாதேவிக்குத் தம் சரீரத்தில் ஒரு பாதியைக் கொடுத்து அர்த்தநாரீசுவரர் ஆனார்.

இப்படி முதியவர் கதை கூறக் கேட்டுக் கொண்டே ஞானசம்பந்தர் போகும் போது, கொள்ளைக் கூட்டத்தார் வழிப்பறி செய்தனர். மூட்டை முடிச்சுக்களைப் பிடுங்கிக் கொண்டு ஓடி விட்டனர். பெரியவரையும் காணவில்லை! சம்பந்தர் திகைத்த போது, சிவபெருமான் ரிஷபத்தின் மேல் காட்சி தந்தார். ''உன்னோடு சற்று நேரம் இருக்க விரும்பி, நானே முதியவனாக வந்தேன்; பூத கணங்களே கொள்ளைக்காரர்களாக வந்தனர். களைப்புத் தீர, இந்தப் பாயசம் அருந்து. பிறகு அருணாசலத்தை அடையலாம்'' என்று கூறி, அன்பு கரக்கஇன்சுவைப் பாயசத்தை வழங்கினார்.

அங்கேயே பதிகம் பாடத் தொடங்கிய சம்பந்தர், அருணையை அடைந்து, ''பூவார் மலர் கொண்டடியார் தொழுகின்ற, வானோர்கள் புகழ்கின்ற, முப்புரங்களை எரித்த'' பெருமானைத் தரிசனம் செய்தார்.

**மேனேஜர்:** உங்களுக்கு எந்தச் சந்தேகமா இருந்தாலும் தயங்காமல் என்னைக் கேட்கலாம்!

**புது குமாஸ்தா:** நான் வாங்கற லஞ்சத்துல நீங்க எவ்வளவு சதம் எதிர்பார்க்கிறீங்க?

— சீர்காழி வி. ரேவதி.





"உமையானர் பங்கர் மன்னியுறை கோவில் அண்ணாமலையாரே" என்று பாடினார்.

அருணாசலத்தின் மகிமையை விளக்க ஸ்தல புராணம் எவ்வளவோ சொல்கிறது. சூரிய பகவான் அருணாசலத்தைப் பூஜித்த படியால், மற்ற ஒளிகளையெல்லாம் தன்னுள்ளே அடக்கக் கூடிய பேரொளியைப் பெற்றார். யானை ஒன்று நீர் குடிக்கும் போது வனத்தின் புஷ்பங்களை மலைமீது




மீண்டும் தங்கப் பதக்கமும்
300 ரொக்கப் பரிசுகளும்



Marketing Office
JYOTHY LABORATORIES,
44, Shivshakthi Ind Estate, Marol,
Bombay-400 059

உஜாலா




சிதறச் செய்ததால், சிவகணங்களில் ஒருவனாயிற்று. இவ்வாறு பல கதைகள். பதினோரு நாட்களாவது மலையை வலம் வந்தவர்களுக்கு மறுபிறவியே கிடையாது என்று கூறப்படுகிறது.

கோவில் என்றால் எப்பேர்ப்பட்ட கோவில்! எத்தனை கோபுரங்கள்! எத்தனை மண்டபங்கள்! ஒரே நாளில் முழுவதையும் சரியாகப் பார்த்துவிட முடியாது! பாண்டியர், பல்லவர், ஹொய்சாளர், விஜயநகர மன்னர், தஞ்சை நாயக்க மன்னர் என்று பலரும் அறங்கள் செய்திருக்கிறார்கள். ராஜேந்திர சோழர் காலத்தில் திருவண்ணாமலையை உள்ளடக்கிய நாட்டுக்கு 'ஜெயங்கொண்ட சோழ மண்டலம்' என்ற பெயர். மன்னர்களின் திருப்பணிகளை விட, 'மங்கையர்க்கரசி என்ற பெண்மணி தன் ஆபரணங்களையெல்லாம் விற்று, ஏரியை அகழச் செய்து புதுப்பித்தாள்' என்ற செய்திதான் நெஞ்சை அதிகமாக நெகிழ்த்துகிறது.

தேஜோமய லிங்கம். தீபாராதனை நடக்கும் போது உருவமற்ற இறைவனை ஒளிப் பிழம்பாக, ஞான ஜோதியாகக் கண்டு களிக்கிறோம். உண்ணாமுலையம்மை சந்நிதியில், ஈசனுடைய சரீரத்திலேயே ஒரு பாகமாக விளங்குகிறவளை, இப்போது தனியே சர்வாலங்கார பூஷிதையாக, கருணைத் தாயாகத் தரிசிக்கிறோம்.

அந்தக் கருணையின் மறுவடிவமாகத் தான், இங்கே அருணாசலேசுவரரின் கோபுரத்திலிருந்து அருணகிரிநாதர் குதித்து உயிரை மாய்த்துக் கொள்ளத் துணிந்த போது, முருகப் பெருமான் தமது திருக்கரங்களால் தாங்கிக் கொண்டார். கருணையின் இன்னொரு வடிவமாக இங்கே வாழ்ந்து, அண்மைக் காலத்தில் அருள் புரிந்தவர் பகவான் ரமணர்.

பார்வதி தேவிக்கு ஈசன் தரிசனம் அளித்த தினம், மலைமீது ஏற்றப்படும் தீபத்தைத் தூரத்திலிருந்து தரிசித்தாலே புண்ணியம் என்று நம்புகிறோம். தேர்வடம் போன்ற திரியிட்டுக் குடம் குடமாக நெய்யிட்டு, மலை உச்சியில் ஏற்றப்படும் தீபத்தின் ஒளி பல மைல் தூரம் வரை தெரிகிறது. இந்த ஒளியேற்றும் விழாவை நாடெங்கும் நமது இல்லங்களிலும் வரிசையாகத் தீபங்கள் ஏற்றிக் கொண்டாடுகிறோம். அந்த ஒளி, நம் இதயங்களிலும் பரவட்டும்! அஞ்ஞான இருள் அகலட்டும். அண்ணாமலையாருக்கு அரோகரா!

திருவண்ணாமலை வண்ணப்படம்:

**தம்பையா**






எடுத்த எடுப்பிலேயே சில அம்சங்களைப் பற்றிய பாராட்டுக்களைச் சொல்லிவிட வேண்டும்.

நிகழ்ச்சிகள், வசனங்கள், சுற்றுப்புறம் அனைத்திலும் தென்படும் யதார்த்தம். கடற்கரைச் சூழலும் அதனையொட்டியுள்ள குடியிருப்புகளும் அதனதன் இயல்பு மாறாமல் இடம் பெற்றுள்ளதோடு அங்கே வசிக்கும் மக்களும் பல காட்சிகளில். படம் முழுதும் அங்கங்கே கூட்டம், கூட்டம்... அத்தனை கூட்டம். அவர்களை அழகாகச் சமாளித்துப் பயன்படுத்தியிருப்பது அட்டகாசம்.

நாட்டுப்புறக் கலைகளைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்து பட்டம் பெற்றுள்ளதோடு அவற்றைப் பரப்பவும் முயன்று வரும் டாக்டர் விஜயலட்சுமியைப் பயன்படுத்தியிருப்பது மற்றொரு ப்ளஸ் மார்க். தொலைக்காட்சி நிலையத்தின் அர்த்தமற்ற அரை மணி நேரக் கட்டுப்பாட்டுக்குள்ளேயே அசர வைத்தவர், விசாலத் திரையில் கிடைத்துள்ள வாய்ப்பைச் சும்மா விட்டு விடுவாரா? அவரே இயற்றிப் பாடியுள்ள இரண்டு பாடல்கள் சுகம்.

நாட்டுப்புறப் பாடல்களை அசல் தன்மை மாறாமல் பயன்படுத்தியிருப்பதோடு ஜனரஞ்சக மெட்டுக்களும் அங்கங்கே. குறிப்பாக, 'குஞ்சுதான், குஞ்சுதான்...' பாடல். அதன் பின்னணி இசைக்கேற்பப் பார்வையாளர் கூட்டத்திலிருந்த அந்த வெளிநாட்டுப் பெண்மணியின் 'பாலே' அசைவுகள் பலே.

'அம்மன் காலனி' என்கிற குடியிருப்புப் பகுதியொன்றை உருவாக்கி, அதில் இந்துக்களையும் இஸ்லாமியர்களையும், கிறிஸ்துவர்களையும் இடம் பெறச் செய்து, அவர்களை ஒரே குடும்பம் போல உலவ விட்டு, வந்து சேரும் ஒவ்வொருவருமே அத்தனை குடும்பங்களுக்கும் சொந்தம் என்கிற ரீதியில் செயல்படுவதாகக் காண்பித்திருப்பது இன்றையச் சூழ்நிலையில் மிகமிகத் தேவையான, வரவேற்கப்பட வேண்டிய கருத்து.

எம். என். நம்பியார், வி. கே. ராமசாமி, நாகேஷ், மனோரமா ஆகியோர் முதிர்ந்த நடிப்புக்குப் பிரதிநிதிகள் என்றால், சரண்ராஜ், ஆனந்த் பாபு, சார்லி, ராஜேஷ், சிதாரா ஆகிய இளம் தலைமுறையினருக்கும் இடம் உண்டு. வில்லன் உதயப் பிரகாஷ் விழியாலேயே வேகம் காட்டுகிறார்.

துண்டு துண்டான காட்சிகள்.

ஓட்டத்துடன் ஒட்டாத திடீர்ப் பாத்திர அறிமுகங்கள்.

படம் நெடுகிலும் ஓடிய இயல்புத் தன்மைக்குப் புறம்பான, மிகச் செயற்கையான உச்ச கட்டம்...

இப்படிப்பட்ட குறைகள் இடம் பெற்றிருந்தாலும், அடிப்படை நோக்கம் 'அச்சா'வாக இருப்பதால் அதன் முன், அவை அடிபட்டுப் போகின்றன.

வித்தியாசமான ராகம்.

— சி. ஆர். கே.




# ஏலவில் போனவர்களின் பட்டியல்...

## COUNT DOWN — 6

"இவனா?'' என்றார், குரலில் ஆச்சரியத்துடன், கர்னல் அருள்தாஸ்.

"இவரைத் தெரியுமா?, கர்னல், உங்களுக்கு?'' அச்சுதன் வியப்புடன் கேட்டான்.

இதற்குள் லக்ஷ்மிரூபாவின் அப்பா, கீழே வீட்டிற்குள் நடந்து மறைந்தார். சிறிது நேரத்தில் இவர்கள் இருந்த அறைக்குள் பிரவேசித்தார். அவரைக் கூட்டி வந்த அழகப்பன் விலகி நின்றான். சற்றே சோகம் தடவிய முகத்துடன், அறைக்குள் வந்த அவர் நிமிர்ந்தார். கர்னலைப் பார்த்தார். புலிக் கூண்டிற்குள் தப்பிதமாய் நுழைந்து விட்டதைப் போன்றதொரு கிலி.அவர் கண்களைத் தாக்கியது.

"கர்னல், நீங்களா?''

"என்னை நினைவு வைத்திருக்கிறாயா, குருசிவகுமார்?'' — கர்னல் அருள்தாஸின் குரலில் மெல்லிய கேலி கலந்திருந்தது.

கழுவிவிட்ட பளிங்குத் துண்டங்கள் போல் உயிரில்லாத கண்களால் கர்னலைப் பார்த்தார், குருசிவகுமார்.

"அச்சுதன், சார் யாரென்று உனக்குச் சொல்லவில்லையே?''

அச்சுதன் ஆர்வத்துடன் அவரைக் கவனித்தான்.

"சிவகுமார், உன்னை நீயே அறிமுகம் செய்து கொள்கிறாயா, இல்லை நான் செய்து வைக்கட்டுமா?''

குரு சிவகுமாரிடமிருந்து பதில் இல்லை.

"இவர் ஆர்மியில் எலக்ட்ரானிக்ஸ் இன்ஜினீயராக இருந்தவர், அச்சுதன். நம் கம்யூனிகேஷன் சிஸ்டத்தை நவீனமாக்கிய போது, இவர்தான் பொறுப்பேற்று, பல புதிய கருவிகளை நமக்குச் செய்து கொடுத்தார். இரண்டு வருடங்களுக்கு முன், உடல்நலம் சரியில்லை என்று ரிடையராகி விட்டார். ஏதோ ஒரு கம்பெனியில் எலக்ட்ரானிக்ஸ் இன்ஜினீயராக மாதாந்திரச் சம்பளம் வாங்கிக் கொண்டிருப்பார் என்றுதான் நினைத்தேன். ஆனால்...''

கர்னல் நாற்காலியைக் குரு சிவகுமாரின் அருகே கொண்டு நிறுத்தினார். "எதிரிகளிடம் அடிமை சாசனம் எழுதித் தந்து விட்டாயா, சிவா? எவ்வளவு கொடுத்தார்கள்?''

"என் மகள் எங்கே?'' குருசிவகுமாரின் குரல் நடுங்கியது. அகன்ற நெற்றி நிறைய வியர்வை. .

கர்னல் அவருக்குப் பதில் சொல்லாமல், "அழகப்பன், திருச்சியில் இவர் வீட்டில் என்ன கண்டுபிடித்தாய், சொல்?''

அழகப்பன் விறைப்பாக நின்று கொண்டான்.

"பழைய மாடல் ரேடியோ பெட்டி போல ஒன்று இருக்கிறது, கர்னல். அதன் வழியேதான் அவருக்குப் பாகிஸ்தானிலிருந்து மெஸேஜ்கள் வருகின்றன என்று தோன்றுகிறது. வீட்டு மொட்டை மாடியில் பெரிய ஆன்ட்டெனாக்கள் இருந்தன. எல்லாவற்றையும் கைப்பற்றியிருக்கிறோம்.''

"குட்...''

"கர்னல், என் மகள் எங்கே?''

"டான்ஸ் ஆடிக் கொண்டு கலையில் ஈடுபட்டிருந்தவளைத் தவறான காரியத்திற்கு இழுத்து நிம்மதியில்லாமல் பண்ணி விட்டாயே, சிவா?''

"என் மகள் எங்கே?''

> திறமையான ஒற்றனின் ஒரு வேஷத்தை நீங்கள் கலைத்துப் பார்க்கு முன் அவன் இன்னொரு வேஷத்தில் மாயமாகியிருப்பான்.
>
> — லியோ ஹார்மோடி.

அஞ்சனா ஜெயக்கெல்ராஜ்

''என் கேள்விக்கு நீ முதலில் பதில் சொல். மணிமாறன் எங்கே?''

''எனக்குத் தெரியாது.''

''நீ ஆர்மியில் இருந்தவன். ஆர்மியின் முறைகளைப் பற்றி உனக்குத் தெரியும். உன்னிடமிருந்து உண்மைகளை வரவழைக்க வேண்டுமென்று வரும் போது, அவசியமென்றால் நான் என்னென்ன வழிகளை யோசிப்பேன் என்று உனக்குத் தெரியும்.''

''சத்தியமாக எனக்கு மணிமாறன் இருக்கும் இடம் தெரியாது, கர்னல்.'' குருசிவகுமாரின் கண்களில் தோல்வி தெரிந்தது.

''உனக்கு என்னென்ன தெரியும், முதலில் அதைச் சொல்.''

கரையில் மோதி வெடிக்கும் கடல் நுரையைப் போல அமைதியானதொரு சலனம் குருசிவகுமாரின் முகத்தில் தென்பட்டது. உதடுகளை ஈரப்படுத்திக் கொண்டு, ஒத்துழைக்காத குரலில் பேசத் துவங்கினார்.

''இந்தியாவிலிருந்து பாகிஸ்தானிற்கு ரகசிய ரேடியோ செய்திகள் அனுப்பும் இடங்களில் இருச்சியும் ஒன்று. அங்கே அந்த எலெக்ட்ரானிக்ஸ் கருவியை என் பொறுப்பில் விட்டிருக்கிறார்கள். ஏஜெண்டுகள் கொண்டு தரும் சங்கேதச் செய்திகளை, நான் பிரத்யேக அலைவரிசையில் அனுப்புவேன். அதே போல இங்கே இருப்பவர்களுக்கு அங்கிருந்தும் ரகசியக் கட்டளைகளும், செய்திகளும் வரும். அவற்றை உரியவர்களிடம் சேர்ப்பேன். சென்ற வாரம் எனக்கு ஒரு செய்தி வந்தது.''

அவர் நிறுத்தி விட்டுச் சுற்றிலும் தயக்கத்துடன் பார்த்தார்.

''பரவாயில்லை, தைரியமாகப் பேசலாம். இங்கே இருப்பவர்கள் நம்முடைய ஆட்கள் தான். அதாவது விசுவாசமான உண்மையான ஆட்கள்'' என்றார், கர்னல் அருள் தாஸ்.

''என் மகள் லக்ஷ்மி ரூபா பாகிஸ்தானிற்கு கலை நிகழ்ச்சிக்காக இந்த வாரம் போகப் போகிறாள் என்பது அங்கிருப்பவர்களுக்கு ஏற்கெனவே தெரியும். மேஜர் நாஸர் என்பவர் என்னைத் தொடர்பு கொண்டார். இந்திய ராணுவத்தைச் சேர்ந்த கேப்டன் மணிமாறன் என்பவரிடம் மிக முக்கியமான ஒரு பொருள் இருப்பதாகவும், அது அவர்களுக்குப் பத்திரமாக வந்து சேர வேண்டும் என்றும் சொன்னார். லக்ஷ்மிரூபா நாட்டிய நிகழ்ச்சிக்காக வரும் போது அதை ஒளித்து எடுத்து வந்து விடலாம் என்றும், அதற்கு மணிமாறனுக்கு வேண்டிய உதவிகளை அவள் செய்ய வேண்டும் என்றும் சொன்னார். லக்ஷ்மிரூபாவிற்கு ஒரு சங்கேதப் பெயர் கொடுக்கும்படி என்னிடம் கேட்டார். மணிமாறன் தமிழன் என்பதால் லக்ஷ்மியை செல்வம் என்றும், ரூபாவை மணி என்றும் அவனுக்குப் புரியும்படி மாற்றித் தந்தேன்...''

''அதுதானே, உருது பேசுபவர்கள் எப்படி தமிழ் மொழிபெயர்ப்பெல்லாம்



செய்தார்கள் என்று யோசித்துக் கொண்டிருந்தேன்..'' என்றான் அச்சுதன், புதிர் விடுபட்டது போன்ற ஆறுதலுடன்.

''அப்புறம்?'' கர்னல் ஊக்கினார்.

''நான் லக்ஷ்மிருபாவிடம் மணிமாறன் என்பவன் வருவான், அவனுக்கு உதவு என்றேன். அவ்வளவுதான். அதற்கப்புறம் நடந்ததெல்லாம் நீங்கள் சொல்லித்தான் எனக்கே தெரியப் போகிறது.''

''எங்களுக்கு ஏற்கெனவே தெரிந்த விவரங்களையே நீ இப்போது வேறு கோணத்தில் சொல்லியிருக்கிறாய். புதிதாக எந்த விவரமும் தந்து விடாமல் கவனமாய்ப் பேசுகிறாய், சிவா.''

''தெரிந்தது அத்தனையும் சொல்லி விட்டேன், கர்னல். மணிமாறனை இதுவரை நான் பார்த்தது கூட இல்லை.''

''மணிமாறன் எங்கே போயிருப்பான், சொல்.''

''என் மகள் மீது சத்தியமாக எனக்குத் தெரியாது, கர்னல்...'' குரு சிவகுமாரின் கண்களில் நீர் முட்டியது. ''நான் இந்தியாவிற்குத் துரோகமாக வேலை செய்தது தப்புத்தான். எனக்கு என்ன தண்டனை தர வேண்டுமோ, தாருங்கள். ஆனால் என் மகளை விட்டு விடுங்கள். அவளுக்கு ஒன்றும் தெரியாது.''

''உனக்கு இரண்டு மணி நேரம் தருகிறேன். யோசி. தனிமையில் நிதானமாக யோசி. நீ எல்லா உண்மைகளையும் சொல்லி விட்டால் லக்ஷ்மிருபாவை ரிலீஸ் பண்ணி விடலாம். போட்ட புரோகிராம்படி அவள் பாகிஸ்தானிற்குப் போகலாம். இல்லையென்றால் பேப்பர்களுக்கு நியூஸைக் கொடுத்து அவள் போட்டோவுடன் செய்தி முதல் பக்கத்திலேயே வரும்படி செய்யலாம். எது வேண்டும் என்று நீயே முடிவு செய்.''

''கர்னல், காலேஜில் படிப்பவள் லக்ஷ்மிருபா. அவளை அசிங்கப்படுத்தி விடாதீர்கள், ப்ளீஸ்... அவள் அப்புறம் மெட்ராஸில் தலைநிமிர்ந்து நடக்கவே முடியாது.''

''அவள் அசிங்கப்படுவதும் அசிங்கப்படாததும் உன் கையில்தான் இருக்கிறது, சிவா...'' கர்னல் அருள்தாஸ் அச்சுதனின் பக்கம் திரும்பினார். ''அவரைக் கொஞ்ச நேரம் தனிமையில் விடுவோம், அச்சுதன்.''

கர்ப்ப மேகங்கள் பிரசவ வலியில் முனகிக் கொண்டிருந்தன. முன்தலை விளக்கின் வெளிச்சத்தைக் கிலோ மீட்டர்களுக்கு வாரி இறைத்துக் கொண்டு, மின்சார ரயில் தடதடத்துக் கடந்து போகும் வரை காத்திருந்து விட்டு, மணிமாறன் ரயில்வே கேட்டைக் கடந்தான்.

பாதை திடீரென்று சரிந்து இறங்கியது. முந்தின சில நாட்களின் எதிர்பாராத மழை தார்ச் சாலையின் தோலை அரித்துப் போட்டிருக்க, குழிகளில் இன்னும் சேறு காயவில்லை. கேட் திறந்ததும், பொறுமையில்லாமல் வாகனங்கள் முண்டியடித்து எதிரெதிர்த் திசைகளில் நெருக்கிக் கடந்தன.

மணிமாறன் இடதுபுறம் இருந்த பேக்கரியில் நுழைந்தான்.

சந்தனக் கீற்று இட்டு மலையாளத்தில் அப்பளம் விலை சொல்லிக் கொண்டிருந்த கடைக்காரனைப் பார்த்ததும், அச்சுதனின் நினைவு வந்தது.

எவ்வளவு நெருக்கமாகத் தப்பித்தேன்!

கடைக்காரன் இவனைப் பார்த்ததும் நிமிர்ந்தான்.

''சாருக்கு என்ன வேண்டும்?''

''ஐயப்பன் தெரு எங்கே இருக்கிறது?''

''ஐயப்பன் தெருவோ? இதோ கோயில் தெரிகிறதே. அதற்குப் பின்னால்.''

இதோ என்று அவன் சுட்டிக்காட்டிய கோயிலுக்கு அரை கிலோ மீட்டர் நடந்து போக வேண்டியிருந்தது.

ஐயப்பன் தெரு அமைதியாக இருந்தது.

நெருக்கமான வீடுகளில் டெலிவிஷன்களின் இரைச்சல் மட்டுமே.

மணிமாறன் நான்காம் நம்பர் வீட்டை அடைந்தான். கேட்டை சப்தப்படுத்தினான்.

வீட்டிற்குள் டெலிவிஷனின் ஒலி குறைந்தது. வாசலில் விளக்கு எரிந்தது. கதவு திறந்து பார்த்தவன் கைலியும், பனியனுமாக இருந்தான்.

''யாரு?''

''ஹக்கிம் இருக்கிறாரா?'' என்றான், மணிமாறன்.

விசாரித்தவன் இன்னும் வெளிச்சத்திற்கு வந்தான். ''நீயா?'' என்றான். மணிமாறனிடம். கேட்டைத் திறந்தான்.

''எப்படியிருக்கிறாய், ஹக்கிம்?''

''இங்கே ஏன் வந்தாய், மணிமாறன்? வீட்டில் விருந்தாளிகள் எல்லாம் வந்திருக்கிறார்கள்...'' ஹக்கிமின் குரல் தயங்கியது.

''நீ பிஸினஸ் செய்யும் இடத்தில் பகல் நேரத்தில் உன்னைப் பார்க்க வர முடியாதபடி சிக்கலில் இருக்கிறேன், ஹக்கிம். நான் வீட்டிற்குள் வரவில்லை. நீ வெளியே வா. உன்னிடம் கொஞ்சம் பேச வேண்டும்.''

''ஒரு நிமிஷம்...''

மணிமாறன் கேட்டருகிலேயே காத்திருக்க, ஹக்கிம் சட்டையையும், செருப்புக்களையும் அணிந்து வெளியே வந்தான்.

அருகிலிருந்த சிறு பூங்காவில் ஹெலிகாப்டர் இறக்கைகள் போல் தலைக்கு மேல் சுற்றிய கொசுக்களுக்கு அடியில் உட்கார்ந்து கொண்டார்கள்.

''நீ எப்போது மெட்ராஸ் வந்தாய், மணி

"ஆபீஸ்ல உங்க பேரைச் சொல்லி எவன் எவனோ பணம் சுருட்டறானாமே! ஏன் சும்மா இருக்கீங்க?"

"என்னை என்ன பண்ணச் சொல்றே? 'என்னிடம் மட்டும் லஞ்சம் தரவும்; வேறு எவரிடமும் கொடுக்க வேண்டாம்'னு அறிக்கையா விட முடியும்?"

— என். நாகராஜன்.



மாறன்?"

"இரண்டு மூன்று நாட்கள் ஆகிறது. ஒரு முக்கிய வேலையாக வந்தேன். ஆனால் காரியம் தடைப்பட்டு விட்டது..." — மணிமாறன் லக்ஷ்மி ரூபாவைச் சந்தித்தது. ஆனால் அச்சுதனின் திடீர் வரவால் திட்டம் குலைந்து போனது, தான் தப்பித்தது எல்லாம் சொன்னான். ஆனால் பாகிஸ்தானிருந்து என்ன அனுப்பியிருந்தான் என்பதைச் சொல்லவில்லை.

"கர்னல் அருள்தாஸின் ஆட்கள் என்னைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். அதனால் தைரியமாக எங்கேயும் என்னால் நடமாட முடியவில்லை. எனக்கு மேஜர் நாஸருடன் பேசியாக வேண்டும்.."

"அவசியமில்லை மணிமாறன். உன்னிடம் கொடுக்கச் சொல்லி எனக்கு ஒரு செய்தி வந்து விட்டது.."

"செய்தி வந்ததா? நான் உன்னைச் சந்திக்க வருவேன் என்று யாருக்குத் தெரியும்?"

"எப்போது லக்ஷ்மி ரூபாவை கர்னல் அருள்தாஸின் ஆட்கள் மடக்கினார்களோ, உடனே அவளுடைய அப்பாவிற்கு விஷயம் போய் விட்டது. அவர் மேஜர் நாஸரைத் தொடர்பு கொண்டிருக்கிறார். நாஸருக்குத் தெரியும், உன்னுடைய அடுத்த நடவடிக்கை என்னவாக இருக்க முடியும் என்று.." ஹக்கிமின் குரலில் ரகசியம் இருந்தது.

"எப்படி?"

"சுலபமான மூளை வேலை தான் மணிமாறன். மெட்ராஸில் நம் ஆட்கள் யார் யார் என்று உனக்குத் தெரிந்த பட்டியலை வைத்து நீ யாராவது ஒருத்தரிடம் உதவி கேட்டுப் போவாய் என்று ஊகிப்பது கஷ்டமா? நம் ஆட்கள் அத்தனை பேரிடமும் உனக்கான செய்தி இருக்கிறது."

மேஜர் நாஸர் எங்கோ தொலை தூரத்தில் பாகிஸ்தானில் உட்கார்ந்து கொண்டு அவன் எப்படிச் செயல்படுவான் என்று கணிக்கும் வித்தையை அவன் வியந்தான்.

"என்ன செய்தி, ஹக்கிம்?"

"மொத்தம் இரண்டு செய்திகள். இறந்து போன அமீர் ஜுல்ஃபிகர் திடீரென்று கட்சி மாறியதால், அவனிடமிருந்து என்னென்ன ரகசியங்கள் வெளியே போயிருக்குமோ என்று பாகிஸ்தானில் கவலைப்படுகிறார்கள். அவ்வளவு விசுவாசமாக இருந்தவன் திடீரென்று இந்தியாவின் பக்கம் மாறுவதற்கு என்ன காரணம் என்று தெரிந்து கொள்ளத் துடிக்கிறார்கள். உண்மையான காரணம் ஒரே ஒருத்திக்குத்தான் தெரிந்திருக்க முடியும். அமீரின் தங்கை சாந்தினி. பாகிஸ்தானில் வளர்ந்தவள் என்பதால், அவளுக்கு மேஜர் நாஸரின் நண்பர்கள் பற்றியெல்லாம் தெரியும். அவளை எப்படியாவது பாகிஸ்தானிற்குள் கொண்டு வந்து விட வேண்டும். அல்லது இந்தியாவிலேயே மௌனமாக்கி விட வேண்டும் என்று மேஜர் நாஸர் விரும்புகிறார். சாந்தினியைக் கவர்ந்து வர ஒரு திட்டமிட்டார்களாம். டில்லியில் அது தோற்றுவிட்டதாம். இப்போது அவள் அச்சுதனோடு, கர்னல் அருள்தாஸின் பாதுகாப்பில் மெட்ராஸில் இருக்கிறாள்..."

"இன்னொரு செய்தி?"

"ராணுவத்திலிருந்து இப்போது லீவில் போயிருப்பவர்களின் பட்டியல் ஒன்று உன்னிடம் தரச் சொல்லி தகவல்..."

"புரியவில்லை."

"இந்திய ராணுவத்தில் இருப்பவர்களில் சிலர் லீவு போட்டு விட்டுச் சொந்த ஊர்களுக்குப் போயிருக்கிறார்கள். அவர்கள் அத்தனை பேருடைய பெயர்களையும் ஹெட்க்வார்ட்டர்ஸிலிருந்து ரகசியமாக வாங்கி உன்னிடம் தரச் சொல்லியிருக்கிறார் மேஜர் நாஸர். குருசிவகுமார் அதற்கு ஏற்பாடு செய்து விட்டார். நாளைக்குக் கிடைத்து விடும்..." ஹக்கிம் சொன்னான்.

மணிமாறனின் முகத்தில் குழப்பம் வலை பின்னியது.

லீவில் போனவர்கள் பட்டியலை வைத்துக் கொண்டு தான் என்ன செய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்?

•

(தொடரும்)

# “நானும் மக்களோடு சேர்ந்து போராடுகிறேன்!”

**திருவாடானைத் தொகுதியை நாம் சுற்றிப் பார்க்கச் சென்றபோது, தொகுதி எம்.எல்.ஏ.வான கே.ஆர். இராமசாமி (இ. காங்கிரஸ்) நம்முடனேயே பயணம் செய்து பிரச்னைகளை விளக்கினார்......**

தார்ச் சாலையிலிருந்து தினைக்காத்தான்வயல் என்ற கிராமத்திற்குப் பிரியும் மண் சாலையில் நாம் சென்ற ஜீப் திரும்பிய போது, ஜீப்பை நிறுத்தச் சொன்னார் எம்.எல்.ஏ.

“ஏன்?” என்று கேட்டோம்.

“நான் இங்கேயே இறங்கிக் கொள்கிறேன். நீங்கள் மட்டும் கிராமத்திற்குச் சென்று வாருங்கள்!”

“மக்களைச் சந்திப்பதற்கு என்ன பயம்?”

“பயம் ஒன்றுமில்லை. நானும் உங்களுடனேயே வந்தால், என்னைப் பற்றி அந்த மக்கள் மனந்திறந்து உங்களிடப் பேசத் தயங்கலாம். அதற்காகத்தான் சொன்னேன்!” என்றார் எம்.எல்.ஏ.

அவர் கூறியதிலும் நியாயம் இருந்ததால் நாம் மட்டும் சென்றோம். சாலையா அது? மழை வேறு பெய்திருந்ததால் ஒரே சேறு. சுமார் மூன்று கி.மீ. தூரமுள்ள அந்தச் சாலையைக் கடப்பதற்குள், ஜீப்பே திணறிப் போய் விட்டதென்றால் மற்ற வாகனங்களின் கதி பற்றிக் கேட்பானேன்!

“மழை பெய்து விட்டாலே இந்தக் கதிதான். போன வாரம் ஒரு பெண்ணுக்குத் திடீரென்று பிரசவ வலி வந்து விட்டது. உடனடியாக மாட்டு வண்டியைப் பூட்டினோம். வண்டிச் சக்கரங்கள் சேற்றில் நகரவேயில்லை. வேறு வழியின்றி, அப் பெண்ணைக் கட்டிலில் படுக்க வைத்து, நாங்கள்தான் மெயின் ரோடு வரை சுமந்து சென்றோம். நல்லவேளையாக அதுவரை அப் பெண்ணுக்கு ஒன்றும் ஆகவில்லை.

“இது, இன்று நேற்று நடக்கும் கதையல்ல; கடந்த இருபது வருஷங்களாகவே இப்படித்தான். யூனியன் சேர்மனிடம்

* பாகம்பிரியாள் திருக்கோவில்: இந்தக் குளத்தில் குளித்தால் நினைத்தது நடக்குமாம்...



* ரசாக்: “நீங்களாவது எங்க கஷ்டத்தைக் கேளுங்க...”



* தினைக்காத்தான் வயல்: “இருபது வருஷங்களாகவே இப்படித்தான்...”





* எம். எல். ஏ. இராமசாமி: ''எதையும் செய்யறாக இல்லை...''

சொன்னால் ஏதேதோ காரணம் சொல்கிறாரே தவிர, காரியம் நடக்கவில்லை. காரணம் எங்கள் பஞ்சாயத்துத் தலைவர் அ. தி. மு. க.; எம். எல். ஏ. இ. காங்கிரஸ்; சேர்மனோ தி. மு. க.! எப்படி நடக்கும்? எதிர்க்கட்சி என்றாலே தி. மு. க. ஆட்சியில் எதுவுமே செய்வதில்லை.

''இது ஒருபுறமென்றால் மறுபுறம் மின்சாரம். விவசாயிகளுக்கு மின்சாரத்தை இலவசமாகவே கொடுக்கிறேன் என்கிறார்கள். எங்களூரைப் பொறுத்தவரை அதனால் ஒரு பயனும் இல்லை. காரணம், மின்சாரம் வந்தால்தானே! டியூப் லைட் எரியவே எரியாது. சாதாரண பல்புகளும் அரிக்கேன் விளக்கு மாதிரிதான் எரியும். இந்நிலையில் டீ. வி. எப்படி வேலை செய்யும்? நாங்கள் டீ. வி. பார்த்தே ரொம்ப நாள் ஆகி விட்டது.

''இது பற்றியும் புகார் செய்து பார்த்து அலுத்துப் போனோம். டிரான்ஸ்பார்மரை மாற்றுவதற்கு அரசு தயாராகவே இல்லை. எங்கள் எம். எல். ஏ. வும் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்து விட்டார். பயனில்லை. அப்புறம் கடன் தள்ளுபடி. பல ஊர்களிலுள்ள விவசாயிகளுக்கும் கடன் தள்ளுபடி செய்த போது, எங்களுக்குச் செய்யவில்லை.காரணம்,87 ல்எங்களூருக்கு வந்து பார்த்த அதிகாரி, ஏதோ ஓரிடத்தில் புற்கள் பசுமையாக இருந்ததைப் பார்த்து விட்டு எங்கள் சுற்று வட்டாரமே செழித்துக் கொழிப்பதாக ரிப்போர்ட் எழுதி விட்டதால், அந்த உதவியும் எங்களுக்குக் கிடைக்கவில்லை. குடிநீர் வசதியும் இல்லை.

''இருபது குடும்பங்கள் இருந்தால் ஹரிஜனங்களுக்கான காலனி கட்டிக் கொடுக்க வேண்டுமென்பது விதியாம். எங்களூரில் பதினேழு குடும்பங்கள்தான் இருக்கின்றன என்பதால் விதிமுறைகளைக் காரணம் காட்டி மறுக்கிறார்கள்.

''எது எப்படியோ, எங்களூருக்குச் சாலை வசதி மட்டும் செய்து கொடுக்க ஏற்பாடு செய்தால் உங்கள் பிள்ளை குட்டிகளெல்லாம் நன்றாக இருக்கும். நாங்கள் மட்டுமல்ல; இந்தச் சாலையை மட்டுமே நம்பியிருக்கும் சுற்று வட்டாரத்திலுள்ள சுமார் பதினைந்து கிராமங்கள் உங்கள் பரம்பரையையே வாழ்த்திக் கொண்டாடும்!'' என்று ஊர் மக்களெல்லாம் ஒன்று கூடி வந்து, ஒருமித்த குரலில் நம்மிடம் முறையிட்டார்கள்.

திரும்பி வந்து எம். எல். ஏ. விடம் கேட்டோம். ''நான் சொல்வதை விட இவ்வூரின் பஞ்சாயத்துத் தலைவர் தங்கவேலு (அ. தி. மு. க.) சொல்வதுதான் பொருத்தமாக இருக்கும்'' என்று பஞ்சாயத்துத் தலைவரிடம் அழைத்துச் சென்றார்.

''நீங்கள் பார்த்தது; கேட்டது எல்லாமே உண்மைதான். ரோடு வசதி செய்யாததற்குக் காரணம், நான் அ. தி. மு. க.; யூனியன் சேர்மன் தி. மு. க. என்பதுதான்!'' என்றார் தங்கவேலு.





• மருதுபாண்டியன்

• சண்முகம்

"சரி, எம்.எல்.ஏ. உங்களுக்காக என்ன செய்கிறார்?"

"அவரும் எதிர்க்கட்சிதானே! அவரும் நானுமே பல ஆபீஸர்களிடம் சேர்ந்து போய் முறையிட்டிருக்கிறோம். ஆனால் யாருமே எங்களுக்குச் செய்யறதாக இல்லையே... இது எங்கள் ஜனங்களுக்கும் தெரியும்!" என்றார் தங்கவேலு.

"அடுத்தபடி எந்த ஊருக்குப் போக வேண்டும்?" என்று கேட்டார் எம்.எல்.ஏ. நம்மிடம்.

"திருவாடானைக்கு."

"சரி, வாருங்கள்... பிரச்னைகள் தீராததற்கு அரசியல்வாதிகள் மட்டுமே காரணமில்லை; திட்டங்களைச் செயல்படுத்துகிற அதிகாரிகளும் முக்கிய காரணம் என்பதைத் திருவாடானையில் தெரிந்து கொள்வீர்கள். அது ஒரு டவுன் பஞ்சாயத்து. அதன் தலைவர் சண்முகம் தி.மு.க. காரர்தான். நீங்கள் மக்களைச் சந்தித்துத்தான் பிரச்னைகளைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதில்லை. அவரே உங்களுக்கு விளக்குவார்...." என்று சொன்ன எம்.எல்.ஏ. திருவாடானை சென்றதும் தலைவர் சண்முகத்தை நமக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

"இங்கு ஆஸ்பத்திரி இருக்கிறது. ஆனால் போதுமான அளவுக்கு டாக்டர்கள் இல்லை. இருபத்தேழு படுக்கைகள் இருந்தும் ஒரேயொரு டாக்டர்தான் என்பதால் நோயாளிகளைக் கவனிக்க முடியவில்லை. ஆஸ்பத்திரிக்குக் காம்பவுண்ட் சுவர் இல்லையென்பதால் பன்றிகள், நாய்கள், கழுதைகள் என்று அனைத்து மிருகங்களும் நோயாளிகளைப் பார்க்க வரும் உறவினர்களைப் போல் தாராளமாக வந்து போகின்றன. டாக்டர்களும் நர்ஸ்களும் தங்குவதற்கான குவார்ட்டர்ஸ் வசதி இல்லையென்பது இங்கே நியமிக்கப்படுகிற டாக்டர்கள் உடனடியாக மாற்றல் வாங்கிக் கொண்டு போய் விடுவதற்கு ஒரு காரணம்.

"இதே போல் வீதிக்கு வீதி குடிநீர்க் குழாய்கள் இருக்கின்றன; ஆனால் குடிநீர்தான் வருவதில்லை. காரணம் குழாய்கள் அமைத்த அதிகாரிகள் மேடு பள்ளங்களைக் கணக்கில் எடுத்துக் கொண்டு சரியானபடி திட்டமிடாததுதான்..." என்று சண்முகம் சொல்லிக் கொண்டிருந்த போது, தற்செயலாக அங்கே வந்த கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த குருசாமி குறுக்கிட்டார்.

"சார், இங்கு ட்ரெய்னேஜ் அமைக்கிறபோது நான் அந்த எஞ்ஜினியரிடம், 'இந்தப் பக்கம் பள்ளம்; அந்தப் பக்கம் மேடு...' என்று எங்களூரைப் பற்றிச் சொன்னபோது அவர், 'ஏய்யா... இரண்டாயிரத்து ஐந்நூறு ரூபாய் சம்பளம் வாங்குகிற எனக்குத் தெரியாதா இதெல்லாம். பேசாமல் போய்யா...' என்று என்னை விரட்டி விட்டு, நான் சொன்னதற்கு எதிராகவே அதை அமைத்தார். அதனால் பாருங்கள் கழிவுநீர் வெளியேறாமல் அங்கங்கே தேங்கி நின்று சுகாதாரக் கேட்டை விளைவிக்கிறது..." என்றார் குருசாமி.

"அவர் சொல்வது உண்மைதான். வாருங்கள் பல இடங்களையும் நானே உங்களுக்குக் காட்டுகிறேன்..." என்று நம்மை அழைத்துச் சென்றார் சண்முகம்.

"இந்த இடம் பஞ்சாயத்துக்குச் சொந்தமான இடம். ஆனால், முன்பு உள்ளாட்சித் தேர்தல்கள் நடக்காமலிருந்த போது அதிகாரிகள் என்ன செய்தார்கள் தெரியுமா? தனிப்பட்டவர்களுக்குப் பட்டாப் போட்டுக் கொடுத்து விட்டார்கள். இப்போது நாங்கள் அந்தப் பட்டா செல்லாது என்று போராடிக் கொண்டிருக்கிறோம்..." என்று அந்த இடத்தைக் காட்டிச் சொன்னார் சண்முகம்.

அப்போது தற்செயலாக அங்கே வந்த காரங்காடு பஞ்சாயத்துத் தலைவர் அருளானந்தத்தை நம்மிடம் அறிமுகம் செய்து வைத்த சண்முகம், "நீங்களும் உங்கள் குறைகளைச் சொல்லுங்கள் அண்ணாச்சி..." என்றார் அவரிடம்.

"எங்களூரிலும் குடிநீர்க் குழாயெல்லாம் உண்டு. அதில் குடிநீர் வந்துதான் நாலு வருஷத்துக்கு மேலாச்சு. வெயில் காலத்திலே ஒரு குடம் குடிநீர் அஞ்சு ரூபாய் வரை விலை கொடுத்து வாங்குகிற கொடுமை உலகத்திலேயே எங்க ஊருலதாங்க நடக்கிறது. அப்புறம் பஸ். வந்துகிட்டிருந்த பஸ்ஸையும் நிறுத்திட்டாங்க. எம்.எல்.ஏ. வோடு சேர்ந்து நாங்க எல்லோரும் பஸ் மறியலில்

லாம் செஞ்சு பார்த்திட்டோம். யாரும் மசியலை. அதிகாரிங்களெல்லாம் எதையும் கண்டுக்கிறதே இல்லீங்க...'' என்றார் அருளானந்தம்.

''நீங்கள் ஆளுங்கட்சியைச் சேர்ந்தவராக இருந்துமா உங்களால் பிரச்னைகளைத் தீர்க்க முடியவில்லை? ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்றோம் மீண்டும் சண்முகத்திடம்.

''எந்தக் கட்சியா இருந்தா என்னங்க... நாங்க திட்டம்தான் போட முடியும். அதற்கான நிதி வசதியைத்தான் பெற்றுத் தர முடியும். ஆனால் அதைச் செயல்படுத்துவது அதிகாரிகள்தானே! குடிநீரை எடுத்துக் கொள்ளுங்கள். கூட்டுக் குடிநீர்த் திட்டத்தில் குழாய்கள் போட வேண்டுமென்றால் அதைப் போடுவது குடிநீர் வடிகால் வாரிய அதிகாரிகள்தானே! அவர்கள் சரியாகப் போடுவதேயில்லை. பேப்பர் அளவில்தான் எல்லாம் செய்யப்பட்டதாக இருக்கும். நிஜத்தில் அப்படியிருக்காது. குழாய்கள் போட்டதாகக் கணக்குக் காட்டினால் போதுமா? அந்தக் குழாய்களில் குடிநீர் போகிறமாதிரி போட வேண்டாமா? அதுதான் இடையாது!'' என்றார் சண்முகம்.

அடுத்து திருவாடானைக்கு அருகிலுள்ள திருவெற்றியூருக்குப் புறப்பட்டோம்.

''திருவெற்றியூரிலுள்ள கோவில் இப்பகுதியில் பிரசித்தமானது. அம்பாள் பெயர் பாகம்பிரியாள். சுவாமி பெயர் வால்மீகி நாதர். ஒவ்வொரு வியாழனன்று இரவும் ஏராளமான மக்கள் வந்து கூடுவார்கள். இரவு தங்கி, வெள்ளிக்கிழமை அதிகாலையில் அங்குள்ள குளத்தில் குளித்து விட்டுத் தரிசனம் செய்தால், நினைத்தது நடக்கும்; நோய் நொடிகள் நீங்கும் என்கிற நம்பிக்கை. அந்த நம்பிக்கையோடு வரும் பக்தர்கள் இரவு தங்கும் போது காலைக் கடன்களுக்கான வசதிகள் வேண்டாமா? கிடையாது என்பதால் அங்கங்கே திறந்தவெளிகளைத்தான் உபயோகிக்கிறார்கள். அதனால் ஊரின் சுகாதாரமே கெடுகிறது. மேலும் அந்தக் குளத்திலுள்ள நீரும் சுத்தமானதாக இல்லை என்பதும் குறிப்பிடத்தக்கது.

''கோயில் தேவஸ்தானத்தைச் சேர்ந்ததுதான் என்றாலும், தேவஸ்தானம் தன்னிஷ்டப்படி செலவு செய்ய முடியாது. அறநிலையத் துறை அனுமதியளித்தால்தான் எதையுமே செய்ய முடியும் என்கிற நிலை. அறநிலையத் துறையோ ஊரின் சுகாதாரத்தைப் பற்றியோ, பக்தர்களின் வசதிகள் பற்றியோ கவலைப்படுவதாகவே தெரியவில்லை. இந்த நிலையில் நானோ அல்லது பஞ்சாயத்துத் தலைவரோதான் என்ன செய்ய முடியும்? நீங்களே வந்து பாருங்கள்.


# மங்கையர் மலர்

டிசம்பர் '90



● காலை உணவைத் தவிர்க்காதீர்கள்!

— இது காப்பி மட்டுமே குடித்துவிட்டு வேலை செய்யும் பெண்களுக்கு

● உயரம் தாண்டுதல்

— வேலைக்குப் போகும் பெண்களின் மனக்குமுறல்களைக் கூறும் குறுநாவல்



● மனைவியின் உருவில் ஒரு தாய்!

— சிறப்புக் கட்டுரை

பஞ்சாயத்துத் தலைவரையும் சந்தித்துக் கேளுங்கள்...'' என்று சொல்லிக் கொண்டே வந்தார் எம். எல். ஏ.

திருவெற்றியூர்ப் பஞ்சாயத்துத் தலைவர் மருதுபாண்டியன் (ஜனதா தளம்) எம். எல். ஏ. கூறியதை அப்படியே ஒப்புக் கொண்டு பேசினார்.

அடுத்து தொண்டி டவுன் பஞ்சாயத்துத் தலைவர் ரசாக் (இ. காங்கிரஸ்) கைச் சந்தித்தோம். ''ஏதோ நீங்க எங்க கஷ்டத்தைக் காது குடுத்துக் கேட்கவாவது வந்தீங்களே... அதுக்கே நாங்க உங்களுக்கு நன்றி சொல்லணும்...'' என்று சொல்ல ஆரம்பித்தார் ரசாக்.

''அரசாங்கத்திலுள்ள அதிகார வர்க்கம் எப்படியெல்லாம் இருக்குங்கிறதுக்கு உதாரணமா ஒண்ணு சொல்றேன். தொண்டிலஉள்ள ஜனங்க, வீட்டுக்கு வீடு குடிநீர்க் கனெக்ஷன் வேணும்னாங்க. சரின்னு எழுதினேன். அதுக்கு ரெண்டே முக்கால் லட்சம் கட்டினாத்தான் அது சம்பந்தமான இன்வெஸ்டிகேஷனே செய்வோம்னாங்க அதிகாரிங்க. நாங்களே எல். ஐ. சி. கடன்லதான் இத்திட்டத்தைச் செயல்படுத்தணும்னு நெனைக்கிறோம். இந்த நெலைல எப்படி ரண்டே முக்கால் லட்சம் கட்ட முடியும்னு கேட்டேன். எப்படி கடனை அடைப்பீங்கன்னு கேட்டாங்க. வீட்டுக்கு வீடு கலெக்ட் பண்ணிக் கட்டிடுவோம்னு கணக்குப் போட்டுக் காட்டினேன். சரின்னு ஒப்புக்கிட்டாங்க. இது நடந்தது 86ல். சொன்னவங்க சிவகங்கைல இருக்கிற குடிநீர் வடிகால் வாரிய அதிகாரிங்க.

''நாலஞ்சு வருஷம் கழிஞ்ச நெலைல இப்போ அவங்க என்ன பதில் எழுதியிருக்காங்க தெரியுமா? எங்களுக்கும் அதுக்கும் சம்பந்தமில்லே. நீங்க திருவாடானைல இருக்கிற குடிநீர் வடிகால் வாரிய அலுவலகத்தில போய்ப் பாருங்கன்னு எழுதியிருக்காங்க. இந்தப் பதிலைச் சொல்றதுக்கு அவங்களுக்கு எத்தினி வருஷம் ஆகியிருக்குன்னு பாருங்க... இந்த நெலைல யாரு தலைவரா இருந்துதான் என்னங்க செய்ய முடியும்? ஒவ்வொரு பிரச்னைக்கும் அதிகாரிகள் காட்ற கறுகறுப்பு இதுதாங்க...'' என்றார் ரசாக்.

புதுப்பொலிவு! புது மணம்!
Liril
புத்துணர்வு சோப்
லிரில் புத்துணர்வு
பூரிக்குது எலுமிச்சைப் புத்துணர்ச்சி
இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

''பார்த்தீர்களா... பிரச்னைகள் எப்படியெல்லாம் இருக்கின்றன என்று?'' என்று நம்மிடம் திரும்பி வரும் போது கேட்டார் எம். எல். ஏ. அவரே தொடர்ந்து சொன்னார்.

''அண்மையில் நம்புதாளை என்ற கடலோர மீனவ கிராமத்திலிருந்து மீன் பிடிக்கச் சென்ற பதின்மூன்று மீனவர்கள் காணாமல் போய் விட்டார்கள். ஆனால் ஆளுங்கட்சியினர் அவர்களில் ஏழு குடும்

பங்களுக்குத்தான் உதவித்தொகை வழங்கியிருக்கிறார்கள். நான் சொல்லியும் ஏதும் நடக்கவில்லை. காரணம், அரசியல்! இப்படி நான் எதிர்க்கட்சிக்காரன் என்பதால் ஆளுங்கட்சி என் கோரிக்கைகளைக் கண்டு கொள்வதில்லை என்பது ஒருபுறமென்றால், மறுபுறம் செய்ய முடிந்த காரியங்களைக் கூட செய்யக் கடமைப்பட்ட அதிகாரிகள் செய்வதில்லை. என் தொகுதி வானம் பார்த்த பூமியைக் கொண்ட தொகுதி. அதனால் தொழில்கள் தொடங்கப்பட்டாலன்றி இந்த மக்களின் வளர்ச்சிக்கு வழியே இல்லை. எனவே, தொகுதி எம். பி. யான ப. சிதம்பரத்திடம் அவருக்குத் தெரிந்த தொழிலதிபர்களிடம் சொல்லி, இங்கு தொழில்களைத் துவங்கச் சொல்லுங்கள் என்றேன். நான் சொல்வதற்கு முன்பிருந்தே அவரும் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறார். ஆயினும் யாரும் முன்வரத் தயாராயில்லை. காரணம், மின்சாரம். ட்யூப் லைட் எரிவதற்கே மின்சார வோல்டேஜ் போதவில்லை என்கிறபோது, தொழிற்சாலைகள் எங்கிருந்து இயங்கும்? தொழிலதிபர்கள் எப்படி நம்பிக்கையோடு வந்து தொழில் துவங்குவார்கள்? ஏதோ நீங்கள் வந்த இந்த நேரம் மழை பெய்து விட்டது. இல்லையென்றால் என் தொகுதியில் எங்கு பார்த்தாலும் கடும் குடிநீர்ப் பஞ்சமாகத்தான் இருந்திருக்கும். எம். எல். ஏ. என்ற முறையில் நானும் மக்களோடு சேர்ந்து போராடுகிறேன். அதைத் தவிர என்னால் வேறு எதையும் செய்ய முடியவில்லை...'' என்றார் எம். எல். ஏ. இராமசாமி.

**— இளங்கோவன்.**

வண்ணப்படங்களும், படங்களும்: **சுபா.**

**பின்குறிப்பு: தமிழகத்தின் தெற்கு மாவட்டங்களில் இப்போது எக்கச்சக்க அளவுக்கு டீசல், பெட்ரோல் பற்றாக்குறை நிலவுகிறது. காரணம், தினந்தோறும் ஆயிரக்கணக்கான லிட்டர் டீசலும் பெட்ரோலும் இலங்கைக்குக் கடத்திச் செல்லப்பட்டுக் கொண்டிருப்பதுதான். நமது தெற்கு கடலோரப் பகுதிகளில் இது அனைவருக்கும் தெரிந்தேதான் நடந்து கொண்டிருக்கிறது என்றாலும் இதுபற்றி வெளிப்படையாகப் பேசினால் உயிருக்கே ஆபத்து என்பதால் பேசவே பயப்படுகிறார்கள். நாம் சென்ற ஒவ்வொரு கடலோரப் பகுதி கிராமத்திலும் இந்த பயத்தை நேரடியாகவே பார்த்தோம்.**

---

## பால் கெடாமல் இருக்க...



**ஆ**வின் போன்ற பெரிய நிறுவனங்கள் செய்வது போல் நாமும் வீட்டில் பாலைக் கெடாமல் வைத்துக் கொள்வதற்கு வழி இருக்கிறதா?

வாசகர் யோசனையாக இந்தக் கேள்வியை எழுப்பி பதிலைக் கோரியவர்: **தனா, வேலூர் — 1.**

**இதுபற்றிச் சென்னை கிறிஸ்துவ மகளிர் கல்லூரி மனையியல் தலைவர் திருமதி மாதவியிடம் கேட்டோம். அவர் சொன்னது:**

பாஸ்சுரைஸேஷன் என்பது பாலை நன்றாகக் கொதிக்கவைத்து (70° — 80°C) பின்னர் உடனடியாகக் குளிர வைப்பதுதான். (10°Cக்குக் கீழ்) இப்படி செய்யும் போது கிருமிகள் நாசமடைகின்றன. அவை மீண்டும் பாலில் தோன்றுவதற்கு முன்பாகவே டெட்ராபாக் பெட்டிகள் அல்லது பாலிதீன் உறைகளில் அடைக்கப்படுகிறது. அப்போது இவற்றினுள் காற்று புகாமலும் காப்பாற்றப்படுமேயானால் புதிய கிருமிகள் தோன்ற வழியில்லை. அத்தகைய பாக்கெட்டுகளைக் குளிர்சாதனப் பெட்டியில் வைத்தால் அவை மூன்று மாதம் கூடக் கெடாமல் இருக்கும். ஆனால் வீட்டில் நம்மால் இப்படிச் செய்ய முடியாதே? என்னதான் கொதிக்க வைத்துக் காய்ச்சினாலும் காற்று புகாமல் பாதுகாக்கும் வசதி இல்லையே. எனவே, நீண்ட நாட்களுக்குக் கெடாமல் வைத்திருப்பது சிரமம்தான். மூடி போட்ட பாத்திரத்தில் நன்றாகக் காய்ச்சி உடனடியாக ஃப்ரிஜ்ஜில் உள்ள ஃப்ரீஸரில் வைத்தால் கிட்டத்தட்ட ஒரு வாரம் வரை அது தாக்குப் பிடிக்கலாம்.




**— கல்யாணி.**

**சிரிக்க வையுங்கள்; சிங்கப்பூர் செல்லுங்கள்!**




# குகனிடம் இராமன் கேட்ட கேள்வி..!



கண்டக்டர்: ஏண்ணே, விசில் ஊதியும் வண்டியை நிறுத்தாம போறீங்க?

டிரைவர்: சும்மா இருய்யா! அந்த ஸ்டாப்புல நிக்கறவன்கிட்டே நான் கடன் வாங்கியிருக்கேன்!

— குரு கிருஷ்ணா, திருச்சி – 8.




●● என் நண்பரோடு பேசிக் கொண்டிருந்தேன். நண்பர் 'A' ஜோக்கடிக்க, "அட, பரவாயில்லையே...! 'ஏ' ஜோக்கெல்லாம் சொல்றியே..." என்றேன்! உடனே, பக்கத்தில் நின்ற அவர் மகன், "'ஏ' ஜோக்குன்னா என்னப்பா?" என்றான். "அதெல்லாம் உனக்குப் புரியாது!" என்று நண்பர் சொல்ல, "எனக்கா புரியாதுன்னு நினைச்சீங்க...! 'A' ஃபார் அசிங்கம். 'A' ஜோக்குன்னா அ சி ங் க மா ன ஜோக்கு...!" என்று சொல்லி அனைவரையும் சிரிக்க வைத்துவிட்டான் அந்தச் சிறுவன்!

— பி. ஜி. பி. இசக்கி, செவைசலம்.

கல்லூரியில் படிக்கும் காலத்தில்



கஷ்டமான தேர்வு ஒன்றிற்காக நண்பன் ஒருவன் அறையில் படித்துக் கொண்டிருந்தோம். அப்போது, "இன்னிக்குப் பேப்பர் கஷ்டமா இருந்தா ஒரு மணி நேரத்திலேயே வெளியில் வந்திடுவேன்!" என்று ஒரு நண்பன் சொன்னான். அதற்கு வேறு ஒரு நண்பன், "டேய், நீ வெளியே போகும் போது என்னையும் லேசாக இடித்துவிட்டுப் போ, இல்லைன்னா நான் பாட்டுக்குப் பேப்பர் சுலபம்னு நினைச்சு எழுதிக்கிட்டே இருக்கப் போறேன்!" என்றதும் தேர்வுக் கவலையையும் மறந்து சிரித்தோம்!

— பிரதீபா, சென்னை – 11.



●● நானும் என் நண்பனும் விழுப்புரத்தில் ஒரு ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டிருந்தோம். கூட்டம் அதிகமாக இருந்ததால் ஒரு பெரியவர் சாப்பிட இடத்தைத் தேடி இங்கும் அங்கும் அலைந்து கொண்டிருந்தார். என் நண்பன், அவர் அருகில்

வருவது தெரியாமல், "நான் சந்திரசேகர் மாதிரி; இவர் தேவிலால் மாதிரி. நான் எழுந்தவுடனே இந்த நாற்காலியில் உட்கார்ந்து விடுவார்" என்று மெதுவாகச் சொல்ல, உடனே அந்தப் பெரியவர், "தம்பி நான் இந்நேரம் தேவிலாலா இருந்தா உன்னையும் சாப்பிட விடாம நாற்காலியைக் கவிழ்த்திருப்பேனே!" என்று சொல்லிவிட்டுச் சிரிக்க, நாங்களும் சேர்ந்து சிரித்தோம்.

— டி. வெங்கட், ஆனத்தூர்.



"பிரியாணி ஓட்டலில் ஆசையா ஒரு நாள் சாப்பிட்டது தப்பாப் போச்சு."

"என்ன ஆச்சு?"

"இரண்டு நாள் ஆடு மேய்க்க வைச்சுட்டாங்க!"

— எஸ். தர்மலிங்கம், தம்மணம்பட்டி.

●● எங்கள் அலுவலக அதிகாரி ஒருவர் தொலைபேசியில் பேசும்போது கத்தித்தான் பேசுவார். தவிரவும் பேச்சில் பாதிக்கு மேல் 'சொல்லுங்கோ,' 'சொல்லுங்கோ' என்று கத்திக் கொண்டே இருப்பார். அவருக்குப் பாடம் புகட்ட நினைத்த ஊழியர்கள், ஒருநாள் அவர் தொலைபேசியை எடுத்ததும் அருகில் சென்று சுற்றிலும் நின்று கொண்டார்கள். அவர் 'சொல்லுங்கோ,' 'சொல்லுங்கோ' என்று கத்தியதும் எல்லோரும் கோரஸாக "வேல்முருகா, வேல்" என்று கூவ ஆரம்பித்தார்கள். பிறகு அந்த அதிகாரி எதற்குக் கத்திப் பேசப் போகிறார்?

— பெ. க. சங்கரன், சென்னை — 5.






கணவன்: நீ செஞ்சிருக்கிற ஸ்வீட் நடிகர் சிவாஜி மாதிரி!!

மனைவி: இதென்ன, புது உவமானமா இருக்கு?!

கணவன்: பாத்திரத்தோட பாத்திரமா ஒன்றிப் போயிடுச்சே!

— வி. லலிதா, சென்னை — 64.




●● நான் ஒன்பதாம் வகுப்பில் படிக்கும் போது, கம்ப இராமாயணத்திலிருந்து தேர்வில், ஒரு கேள்வி வந்தது. அதாவது, "குகன், இராமனுக்கு மீன் முதலியவற்றை உணவாகக் கொண்டு வந்த பொழுது, இராமன் என்ன கூறினான்?" என்பது தான் அக்கேள்வி. அதற்கு, "நீ அன்புடன் எங்களுக்கு உணவு படைத்ததே உண்டது போல வயிறு நிரம்பி விட்டது!" என்றெ மாதிரியான பதில் எழுத வேண்டும். ஆனால் ஒரு மாணவன், "என்ன குகா! இவ்வளவு தானா? இது எப்படி எங்கள் மூவருக்கும் போதும்? இன்னும் கொஞ்சம் எடுத்து வா!" என்று இராமன் சொன்னதாகப் பதில் எழுதியிருந்தான். அதை ஆசிரியர் படித்துக் காட்டியதும் வகுப்பே சிரிப்பால் அதிர்ந்தது!

— ஆர். காசிராமன், சோம்பூர் (ஒரிஸா).

"கல்யாணி இப்பக் கூட பரவா யில்லே... கோர்ட்டுக்குப் போகாமே இருந் திடலாம். நான் எதிர்த்த மளிகைக் கடைக் குப் போயி வக்கிலுக்கு கேஸை வாபஸ் வாங்கிக்கலாமுன்னு போன்ல சொல்லிட றேன். நம்ம தலைமுறையிலே நான்தான் முதன் முதலா கோர்ட் வாசலை மிதிக்கற வன்னு சங்கடமாயிருக்கு..."

கோர்ட்டுக்குப் போவதென்று முடிவு செய்து, பஸ் பிடித்து வந்தாயிற்று. இன்னொரு பஸ் பிடித்து கோர்ட் வாசலில் இறங்க வேண்டியதுதான். ஆனால் சிவ ராமன் திரும்பத் திரும்ப இதையே காலை முதல் சொல்லிக் கொண்டிருந்தார். கல்யா ணியோ திடமாய், இன்றோடாவது பிரச் னைகள் தீர்ந்து, விடுதலையுணர்வில் புதுக் காற்றைச் சுவாசிக்க வேண்டும் என்ற தன் விருப்பத்தைத் திரும்பத் திரும்பச் சொல்லி விட்டாள்.

"என்னோட நாப்பதாவது வயசிலே எவ் வளவு பெரிய பாகப்பிரிவினைச் சண்டை வந்துது! எங்கப்பா செத்த பின்னாலே இருந்ததைப் பிரிச்சுக்கறதுக்குக் கத்தியும், கம்பும் எடுத்துக்கற அளவு மனஸ்தாபம். எல்லாமே சலிச்சுப் போயி கோர்ட்டுக்கு போறதுன்னு முடிவாயிடுச்சு. படுக்கையா கெடந்த எங்கம்மாதான் கோர்ட்டை மிதிக்க குடும்ப மானத்தைக் கெடுத்துடாதீங்கன்னு சொன்னாங்க. பேசித் தீர்த்துக்கலாமுன்னு திருப்பூர் மாமாவையும், பொள்ளாச்சி தாத்தாவையும் கூட்டிட்டு வந்து, நாள் கணக் கிலே பேசினோம். பொள்ளாச்சித் தாத்தா சில சமயம் தலைக்கு மேலே கையைக் காட்டிக் கும்பிடுவார். குடும்ப மானத்தைக் காப்பாத்துங்கடான்னு கண்லே கண்ணி



# மறுபடியும் பூக்கும்

சுப்ரபாரதி மணியன்

ரோட கெஞ்சினது இன்னமும் மனசிலிருக்குது. சமாதானம் பண்ணி, பிரிவினை பண்ணி வெச்சார். இப்ப அண்ணன், தம்பிக யார் சாவுக்கு முந்தப் போறம்ன்னு இருக்கற காலம் வரைக்கும் ஒத்துமையாத்தான் இருந்திருக்கோம்...''

''உங்க தலைமுறை வேறப்பா. அண்ணன் தம்பிக உறவும், சண்டையும் வேறே...''

''தலைமுறை வேறதாம்மா. அண்ணன் தம்பி உறவை விட, புருஷன் — பெண்டாட்டி உறவு இன்னமும் நெருக்கமானதுதானே. அதிலே பிரிவுங்கறது சாதாரணமா...''

''பிரியணும்ன்னாப் பிரிஞ்சுத்தான் ஆகணும்.''

''தீர்மானத்திலே ஒரு பிடியும் தளர்த்த மாட்டே. உங்கம்மாவோட பிடிவாதம் உனக்கும் சரியா இருக்கு.''

''தலைமுறை தலைமுறைன்னு சொல்றீங்களே. ஏதாவது ஒரு விதியோ, விஷயமோ எல்லாத் தலைமுறைகளுக்கும் தொடரணும்னு எதிர்பார்க்கறீங்களா.. அப்படி எதிர்பார்த்தா காட்டுமிராண்டிகளோட தலைமுறையிலேயே நர்ம இருந்திருக்கணும். நவீனமான மனிதர்களா வந்திருக்க வேண்டாம்...''

சிவராமன் பேசுவதற்கு எதுவுமில்லை என்பது போல் பேசாமல் நடக்க ஆரம்பித்தார். வாகனங்கள் நெரிசல்பட்டு நகர்ந்து கொண்டிருந்தன. பெட்ரோல் காற்றை சுவாசிப்பதற்குச் சிரமமாக இருந்தது. துண்டை எடுத்து வாயைப் பொத்தினபடி நடக்க ஆரம்பித்தார்.—

சிவராமனை வாயில் துண்டு வைத்த கோலத்துடன் பார்த்ததும் திக்கென்றிருந்தது கல்யாணிக்கு. துக்கம் கொண்டாடுகிறாரா என்றிருந்தது.

''என்னப்பா... துக்கமா... என்னாலே..''

''இல்லம்மா...''

''நீங்க எவ்வளவுதான் கட்டுப்பாட்டுக்கு அடங்கி வாழ்ந்த மனுஷரா இருந்தாலும் என்னை வளர்த்ததிலே நிறையச் சுதந்திரம் இருந்துச்சு. எல்லாத்தையும் தட்டிக் கேட்கச் சொன்னீங்க.''

''ஆமா...''

''இப்போ அப்படி வளர்த்தது தப்புன்னு நெனைக்கறீங்களா...?''

''அப்படிச் சொல்ல முடியாது. ஆனா அப்படி வளர்க்காமே இருந்திருந்தா இன்னமும் சந்தோஷமா நீ இருந்திருப்பியோன்னு நெனைக்கறதுண்டு.''

''இதுதான் மூடத்தனம். உங்க தலைமுறைகளிலிருந்து கடன் வாங்கிட்ட மடத்தனம். புருஷன்கிட்டே அடிபடணும், புருஷனைச் சகிச்சுக்கணும், வலியோடவும், புண்ணோடவும் வாழணும்ன்னு ... நான் அப்படி வாழத் தயாரில்லே. இதையெல்லாம் சகிச்சுக்கத் தயாரில்லே. புருஷன்கிட்டே அடிமையா இருக்கறதுக்கு அடிப்படையான காரணம் பொருளாதாரச் சுதந்திரம் இல்லாதது. எனக்கொரு வேலையிருக்கு. சம்பாதிக்கறேன். போதும்...''

''வேலையும், பணமும் மட்டும் வாழ்க்கையாயிருமா?''

''அதுதானே வாழ்க்கைன்னு புருஷன் சொன்னான். எல்லாத்துக்கும் கெஞ்ச வேண்டியிருந்துச்சு. கூலிக்காரனுக்குப் போடற கூலி மாதிரி, உழைக்கிறதுக்கு சாப்பாடு கெடச்சா மட்டும் போதுமா. தட்டிக் கேட்கற மாதிரி நீங்க சென்சிட்டிவா வளர்த்தது தப்புன்னு புருஷனுக்கு அடங்கிப் போற குடும்பத்திலே சேர்ந்தப்போ தெரிஞ்சது. தீர்மானமா என்னாலே அடிமையா இருக்க முடியாது...''

''எதை அடிமைன்னு சொல்றே? உன் புருஷனோட சம்பளத்திலே அடக்கமா இருக்கணும்; அவனைப் பெத்தவங்களை அவன் காப்பாத்தணும்ன்னு பண்ற செலவு குத்தமா? அவனோட வருவாய்லே உனக்கான பொருளாதாரச் சுதந்திரம் தர முடியாதது எப்படிக் குத்தம்? இதனாலே வர்ற

மனஸ்தாபங்களை நீதான் ரொம்பவும் பெரிசாக்கிக் கோர்ட் வரைக்கும் கொண்டு வந்துட்டேன்னு தோணுது. உன்னோட இயல்புகளுக்கு இது தவறா இருக்கலாம். ஆனா இந்த மனுஷ கஷ்டங்களைக் கூட புரிஞ்சுக்க முடியலேன்னா... இதைத்தான் நீ வீட்டுக்குத் திரும்பி வந்த நாளிலிருந்து சொல்றேன்...''

''அப்படியொரு வாழ்க்கை வேண்டாம்ப்பா...''

''சரி... விவாகரத்து வாங்கிட்டு இன்னொரு கல்யாணம் பண்ணிக்கறதுக்கு உன்னோட சுதந்திர உணர்வு எடம் குடுத்தா — பண்ணிட்டா — அவன்கிட்டே பெரிசா இதைவிட என்ன எதிர்பார்க்க முடியுமுன்னு நினைக்கறே...?''

''எதிர்பார்க்கலேதான்...''

''அப்ப விட்டுக்கொடுத்து சந்தோஷமா இருக்கக் கூடாதா?''

''பெண் ரொம்பக் காலமா விட்டுக் கொடுத்துட்டுத்தான் இருந்திருக்கா... இனி முடியாது.''

''உன் புருஷன் இந்த இடைவெளியிலே தவறைப் பரிசீலனை பண்ணியிருக்கலாமில்லையா... அதுக்கு ஒரு சந்தர்ப்பம்...''

''யாருதான் பரிசீலனை பண்ணாமே இருக்காங்க...''

''ஒரு கொழந்தை பொறந்திருந்தா எவ்வளவோ சிக்கல்கள் கொறஞ்சிருக்கும்...''

சிவராமன் தீர்மானமான விஷயம் போல் இதைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

**கோ**ர்ட் பரபரத்துக்கொண்டிருந்தது. கறுப்பு பூதங்களாய் வக்கீல்களை நினைத்துப் பார்த்த போது, மெல்லியதாய் புன்னகை வந்தது அவளுக்கு. முகம் முகமாய்ப் பார்வையை விலக்கிக் கொண்டு போன போது, அந்த முகம் மனத்தில் விழுந்தது. திக்கென்றது.

அவள் புருஷன் முகம் ஒடுங்கிப்போயிருந்தது. கறுத்த தாடி. கண்களின் கீழ் கறுப்பு மையிட்டிருந்தது. ஒன்பது மாதங்களில் இவ்வளவு இளைத்து விட முடியுமா என்றிருந்தது. 'ஐயோ' என்று உரக்கக் கத்த வேண்டும் போலிருந்தது. ஆனால் எதிர் மறைவான நினைவுகளும், எண்ணங்களுமே கொண்டிருந்த அவரை, இப்படி நினைப்பது ஒருவகையில் வெட்கமாக இருந்தது. ''என்ன இருந்தாலும் புருஷன்தானே!'' என்று மனத்தின் ஒரு மூலையில் சொல்லிக் கொண்டதைச் சற்றே உதறினாள்.

அவனின் ஷேவ் செய்யப்பட்ட முகம் பச்சைத்தனமாய் இருப்பது அவளுக்கு ரொம்பவும் பிடிக்கும் — குழந்தைகளின் மிருதுவான கன்னங்கள் போல, தவளையின் வயிற்றுப் பகுதியின் மிருதுத் தன்மை போல! சந்தனக் கட்டி தோற்கும் என்று அவனிடமே சொல்லியிருக்கிறாள். அந்த மிருதுத் தன்மையும், குழைவும் எங்கு போயிற்று! எதற்கு இந்த துக்கம் கொண்டாடல் என்று பட்டது.

மீண்டும் ஒருமுறை பார்வையைத் திருப்பிய போது அவனின் பார்வை மனத்தில் விழுந்தது. அவனுடனான முதல் ஸ்பரிசம் போலிருந்தது. அவள் காலையிலிருந்து அப்பாவிடம் சொன்னதிலிருந்தும், இப்போதைய அவனின் பிம்பம் பற்றியும் நினைத்துப்பார்த்தாள். வெட்கம் அதிகரித்தது. எதையோ கெஞ்சும் பார்வை போலிருந்தது. அவளின் தைரியத்திற்கு முன் அவன் இளைத்துப்போய் விட்டது போலிருந்தது.

மீண்டும் பார்வையைத் தவிர்க்க எண்ணித் தலைகுனிந்தாள். சுருள் சுருளாக எதெதுவோ நினைவுக்கு வந்தன. நல்ல விஷயங்களாகவே மனத்திற்கு வரட்டும், சுகமும், சந்தோஷமுமான உணர்வுகளாகவே இருக்கட்டும் என நினைத்து, மெல்லக் கண்களை மூடினாள். கல்யாணம் முதல் நிறைய நினைவுகள்.. கற்பனை, போன்று நினைக்க நினைக்கச் சுகம் தந்தது. மறுகணம் ஒடுங்கின தாடி முகம் நினைவுக்கு வந்த போது, தலையை உலுக்கிக் கொண்டாள். யார் காரணம் என்றிருந்தது. 'நீ மட்டும்தான்.. நீ மட்டும்தான்' என்றாள். அப்பா சிவராமன், 'அவன் மட்டுமா நீயும்தான்! பிரச்னைகளை, உணர்வுகளைப் புரிந்து கொண்டு நடக்காத நீயும் கூடத்தான்...' என்றார் நினைவில். திரும்பின போது, அப்பா பக்கத்தில் இல்லை என்பது தெரிந்தது.

'அப்பா சொல்வது போல் சுயபரிசிலனையின் அடையாளம் தானோ இந்த தாடியும், இடுங்கின கண்களும். மனமாற்றம் இருக்கலாமோ? ஏன் நான் பரிசீலனை செய்து கொள்ளக் கூடாது. என்ன செய்வதாம். பெண் அடிமை என்கிறவரை என்ன பரிசிலனை செய்வதாம். விவாகரத்து வழக்கு கோர்ட்டில் விசாரிக்கப்படுகையில் 'பிரிகிறீர்களா?' என்றால் 'ஆம்' என்று சொல்லி விட்டால் போதும். பிரிவுதான். இன்னும் இடைவெளி கொடுக்கலாமா? அப்பா சொல்லும் பரிசிலனை.. நேரடிப் பேச்சு எல்லாம் தவிர்க்குமா... ஐயோ குழப்பமே மிஞ்சுகிறதே. பார்வை இவ்வளவு தொந்தரவு தருகிறதே. பேச்சும், தொழுகையும் பிரச்னைகளைத் தீர்த்து விடும்தானா, பேசலாமா...

பக்கம் வந்த வக்கீல், ''அடுத்த கேஸ் நம்பதுதாம்மா. பத்து நிமிஷத்திலே நம்மது முடிஞ்சிரும். பிரியறீங்களான்னா ஆமான்னு

# போனஸ் அறிவிக்கப்பட்டுள்ளது!

## முன்பைவிட இன்னும் அதிகம்!

எல் ஐ சி பாலிஸிதாரர்களுக்கு ஒரு நற்செய்தி!

### வருடாந்திர போனஸ்

31 மார்ச், 1990 அன்றைக்கான புதிய போனஸ் வீதம்:

★ குறித்தகாலப் பாலிஸிகளுக்கு காப்பீட்டுத் தொகை ஒவ்வொரு ரூ. 1000/- க்கு ஆண்டொன்றுக்கு ரூ. 68/-.

★ முழு ஆயுள் பாலிஸிகளுக்கு, காப்பீட்டுத் தொகை ஒவ்வொரு ரூ. 1000/-க்கு ஆண்டொன்றுக்கு ரூ. 82.50.

கடந்த ஒன்பது ஆண்டுகளில் போனஸ் வீதங்கள் 136% அதிகரித்துள்ளன.

### இறுதி (கூடுதல்) போனஸ்

வருடாந்திர போனஸோடு மட்டுமின்றி உரிமை கோரிக்கை (க்ளைம்) செய்யும்போது அனைத்து பாலிஸிகளும் (மெச்சூரிட்டி அல்லது மரணம்), உரிமை கோரிக்கை செய்யும் தேதியில், 15 ஆண்டுகள் பிரீமியம் செலுத்தப்பட்டும், பாலிஸி முழு இயக்கத்துடனும் இருக்கும் பட்சத்தில், பாதுகாப்பு செய்துள்ள ரூ. 1000/- க்கு ரூ. 50/-லிருந்து ரூ. 350/- வரை இறுதி கூடுதல் போனஸிற்கு தகுதி உண்டு.

[illegible]

| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
|---|---|---|---|
| [illegible] | [illegible] | | |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| [illegible] | [illegible] | [illegible] | [illegible] |
| | | [illegible] | [illegible] |

[illegible]



லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆஃப் இந்தியா

ஆயுள் காப்பு பணியிலே 34 ஆண்டுகள்

## சிரிக்க வையுங்கள்: சிங்கப்பூர் செல்லுங்கள்!

இந்தத் தலைப்பில் வாராவாரம் வாசகர்கள் எழுதும் ஜோக்குகளையும் துணுக்குகளையும் படித்துக் கொண்டிருக்கிறீர்களல்லவா! மேலேயுள்ள வெற்றிடத்தில் பால்பாயிண்ட் பேனாவைக் கொண்டு நீங்களும் அதுபோல் ஒரு ஜோக் அல்லது ஓர் அனுபவத் துணுக்கை எழுதியனுப்புங்கள். பிரசுரமாகும் ஒவ்வொன்றுக்கும் பரிசு. அடுத்த ஆகஸ்ட் வரை யாருடைய ஜோக் அல்லது துணுக்கு அதிக அளவில் பிரசுரமாகிறதோ அவர் செலவின்றி ஜோடியாகச் சிங்கப்பூர் சென்று வரும் வாய்ப்பு! கூடவே சிங்கப்பூர் அனுபவங்கள் பற்றிப் பேட்டியும் தரலாம். 'சிரிப்பு—சிங்கப்பூர்' என்று உறை மீது குறிப்பிட்டு, உடனடியாக எழுதியனுப்புங்கள். முடிவு தேதி: 10.12.90.

ஜோக்/துணுக்கு:

என் பெயர்: ..............................

விலாசம்: ..............................

..............................

..............................

**கல்கி பொன்விழா பரிசுத் திட்டம்**



சொல்லுங்க போதும். மேட்டர் ஆப் செகண்ட்ஸ். சீக்கிரம் கௌம்பிடலாம். ரியல் எஸ்டேட் விஷயமா நானும் கோரட்டூர் போகணும்...'' என்றார்.

கல்யாணி எதுவும் பேசாமல் அவரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

''அப்பா எங்க... வந்து இருக்கச் சொல்லம்மா.''

''சரி சார்...''

**கொ**ஞ்ச நேரம் கழித்து வந்த சிவராமன் பரபரப்பாய் இருக்கிறமாதிரி பட்டது.

''என்னப்பா?''

''ஒண்ணுமில்லே...''

''ரொம்ப டென்ஷனா இருக்கிங்க போலிருக்கு. மாத்திரை போட்டுட்டீங்களா?''

''உம்...''

''அப்புறம் எதுக்கு இந்தத் தவிப்பு...''

''சொல்லட்டுமா. வாசல் பக்கம் போனப்போ உன் புருஷன் நின்னுட்டிருந்தான். என்னைப் பார்த்ததும் 'மாமா'ன்னு கையைப் புடிச்சான். ஒண்ணும் பேசலே. தாரை தாரையாக் கண்ணீர். எனக்கு ஒரு வார்த்தை சொல்ல வாய் வரலே. அத்தனை பேர் இருக்கற நடுரோட்லே 'ஓ'ன்னு கதறினான். நான் ஓடி வந்துட்டேன். எனக்கும் அப்படிக் கதறி அழணும் போலிருக்கு...'' முகத்தைத் துண்டால் பொத்தினார். உடம்பு குலுங்கியது.

''என்னப்பா... சும்மா இருங்க...''

''எப்படிம்மா இருக்கறது. அவன் என்னைத் தொட்டப்போ நீங்கதான் என்னைக் காப்பாத்தணும்னு கெஞ்சின மாதிரி இருந்துச்சு. நடுரோட்லே ஒரு ஆம்பளை அழறதைப் பார்க்க முடியலே. இந்த கேஸ் இன்னிக்கு வேண்டாம். ஒரு தரம் வாய்தா வாங்கம்மா. அப்புறம் முடிவு பண்ணிக்கறது உன்னோட பொறுப்பு. ஒரு தரம் வாய்தா வாங்கம்மா.''

அவனின் முகம் கல்யாணிக்கு மனத்தில் வந்தது. திக்திக்கென்று பயம் அதிகரித்தது. இன்றைக்கு வழக்கு விவாகரத்தாய் முடிந்து விட்டால் அதன்பின் நடப்பதை ஒரு நிமிஷம் சினிமா போல் மனத்தில் ஓட விட்டாள்.

''யோசிக்கணும்னு சொல்வீங்களேப்பா... யோசிக்கணும்தான். வாய்தா வாங்கறேன்'' என்றவள் வக்கீல் அறைப் பக்கம் சென்றாள். எழுந்து நகர்ந்து வந்தார் வக்கீல்.

''என்னம்மா.. அந்த கேஸ் முடிஞ்சிருக்கு. இப்ப நம்ம கேஸ்தான். வா போலாம். பத்து நிமிஷம்தான். அப்புறம் நான் ரியல் எஸ்டேட் விஷயமா உடனே கோரட்டூர் போகணும். வா, சீக்கிரம் முடிச்சரலாம்...'' விறுவிறுவென்று நடக்க ஆரம்பித்தார்.

கல்யாணி அங்கேயே நின்றிருந்தாள்.

## வட்டமேஜை



அனுராதா போட்வால் பேட்டியில், 'வாணி ஜெயராம் போன்றவர்கள் முன்னேறப் பல பெரும் புள்ளிகளே தடையாக இருந்தனர் என்று கேள்விப்பட்டிருக்கிறோம்; உங்கள் அனுபவம் எப்படி?' என்ற கேள்வி தேவையற்றது; சம்பந்தமில்லாதது. அதற்கு அளிக்கப்பட்ட பதிலில், 'நாமாக வாய்ப்புத் தேடிப் போனால்தானே பிரச்னை!' என்ற முதல்வரி ஆட்சேபணைக்குரியது. வாணி ஜெயராம் தானாக வாய்ப்பைத் தேடிப் போன கலைஞர் அல்ல. திரை உலகிலிருந்து அழைப்பு வருமுன்னரே அரங்கேறி, தனது இசையால் பல்லாயிரக் கணக்கான ரசிகர்களை மகாராஷ்டிரமாநிலம்முழுதும்பலகாலம்பிரமிக்க வைத்தவர். "குட்டி" ஹிந்தி திரைப்படத்தில் எல்லாப் பாடல்களையும் பாடி, ஐந்து புகழ் பெற்ற விருதுகளைத் தட்டிச் சென்றவர். பின்னர் தமிழ்த் திரைப்பட உலகின் அழைப்பையும் ஏற்றார். ஏழாயிரத்துக்கும் மேலான திரைப்படப் பாடல்களைப் பாடி, இருமுறை ஜனாதிபதி பரிசு பெற்றவர். அவரைப் பற்றி, மதிப்புக்குரிய கல்கி பத்திரிகையில் தவறான கருத்து வெளியானதற்கு வருந்துகிறேன்.

பம்பாய், எஸ். ஜெயராம்.

* துரோகங்களை வரிசையாகச் சொல்லிய இவ்வாரத் தலையங்கம், எங்களைப்போன்ற இளைஞர்களின் குமுறல்களுக்கு ஆறுதலாக இருந்தது. யாராக இருந்தாலும் குறைகளைக் கண்டிப்புடன் விமர்சிக்கும் உங்கள் தலையங்கத்திற்குத் தலைவணங்குகிறேன்; பாராட்டுக்கள்.

திருச்சி — 1. என். தட்சிணாமூர்த்தி.

* சந்திரசேகர் எவ்வளவுதான் தவறு செய்திருந்தாலும் இன்று இந்நாட்டின் பிரதமர். தாங்கள் அவரைப் பாராட்டவில்லை என்றாலும், நரி என்று எழுதியிருப்பதையும், நரிக் கார்ட்டூன் போட்டிருப்பதையும்தவிர்த்திருக்கலாம். மற்ற நாட்டினர் பார்த்தால் என்ன நினைப்பார்கள்? இந்தியாவின் கௌரவம் என்னாவது? கல்கியா இந்தமாதிரிநடந்துகொள்வது!

தக்கோலம், அ. முஸ்தபா.

* முப்பது வாரங்களாகக் கல்கியில் ஓர் ஆரோக்கியப் பேழையாக வெளிவந்த யோகாசனம் பற்றிய தொடர் கட்டுரை, படித்துப் பாதுகாக்க வேண்டிய ஒன்றாகும். ஓர் ஆசான்மூலம்நேரடியாக 'யோகா' பயின்ற நல்லுணர்வை ஏற்படுத்திய பெருமை வி. என். குமாரசாமி அவர்களையே சேரும்!

கருமத்தம்பட்டி. அ. இராஜப்பன்.

* 'விட்டிலும் ஒரு ஜீவன்' அருமையான கதை. தன் கண்முன்னால் தன் மனைவியின் கஷ்டம் தெரியாதவர்களுக்கு பிறரின் கஷ்டம் மட்டும் எப்படி பூதாகாரமாகத் தெரிகிறது? குடும்பத்தனர் பால் அலட்சியம் கொண்டிருப்பவர்களுக்கு நல்லதொரு படிப்பினைக் கதை!

சென்னை — 45. ஏ. ஜப்பர் காதர்.

* 'புல்வெளிப் பயணங்கள்' கதையில் ஒரு குட்டி லா. ச. ரா. தெரிந்தார். கப்ரபாலனுக்கும் பாராட்டுக்கள்! கே. பி. ஜனார்த்தன் எழுதிய 'அவள் ஒரு மாதிரிதான்' கதையில், தான் சிதைக்கப்பட்டது போல் இன்னொரு பெண்ணின் வாழ்வு குலையக் கூடாது என்ற மனம் கொண்ட அந்தப் பெண் நம் மனத்தில் நிற்கிறாள்.

சென்னை — 28. எம். தியாகராஜன்.

## நாட்டைப் பீடித்துள்ள புற்றுநோய்...

* 'கல்கி இ. மு. க. ஆதரவுபத்திரிகையா?' என்ற கேள்விக்குத் தராசு கூறிய பதிலில், கல்கியின் தரத்தையும், இ. மு. க. ஆட்சியின் குறைபாட்டையும் கூறி ஒரே கல்லில் இரட்டை மாங்காய் அடித்து விட்டார்! சபாஷ்!

கொங்கணாபுரம். வே. செந்தில்குமார்.

* ஹிந்தி பின்னணிப் பாடகி அனுராதா போட்வாலின் பேட்டி, அவரது இசையைப் போலவே இனிமையாயிருந்தது. குறிப்பாக, வளரும் இசைக் கலைஞர்களுக்கு, அவர் குறிப்பிட்டிருந்த அறிவுரைகள், கடைப்பிடிக்க வேண்டிய ஒன்று.

தோட்டக்குறிச்சி. இரா. வளையாபதி.

* கடிகாரத்தில் 'க்வார்ட்ஸ்' என்றால் என்ன? 'ஜுவெல்ஸ்' என்றால்என்ன? 'ஆட்டோமாடிக்' என்றால் என்ன? என்பதற்கெல்லாம் தொழில்நுட்ப ரீதியாகச் சரியான விடையளிக்கத் தெரியாத எங்களுக்கு, இவ்வாரக் கல்கியில் 'மேல்நாட்டுத் தரத்தில் கைக்கடிகாரங்கள்' என்ற தலைப்பில் வந்த கட்டுரை விரிவான விளக்கம் தந்து விட்டது.

இலால்குடி. எம். இராஜேந்திரன்.

* தமக்குக் கிடைத்த பரிசுத் தொகையைப்புற்றுநோய்மருத்துவமனைக்குக் கொடுத்துவிட்டு, அதே சமயத்தில் வெறுப்புணர்ச்சி, பிரிவினைவாதம் ஆகிய புற்றுநோயிலிருந்து நம் நாடு முற்றிலும் விடுபட்டுக் குணமடைய வேண்டும் என்று பிரார்த்தித்துக் கொண்ட எம். எஸ். நம் நெஞ்சில் நிறைகிறார்.

புவனகிரி. ச. அருட்செல்வன்.



## 7

ஓவியா!

ஓவியா!

ஓவியா!

உதடு ஒருமுறை உச்சரித்தாலும் இருதயப்
பாறையெங்கும் அவள் பெயர்
எதிரொலித்தது.

●

"ஓவியா!

பூமிக்கு வந்த பறக்கும் தட்டைப் போல்
உன் பெயர் எனக்கு விசித்திரமா
யிருக்கிறதே!

ஓவியா!

உனக்கென்ன...! பெயர் மட்டும் சொல்லி
விட்டு
முகவரி சொல்லாமல் போய்விட்டாய்.

ஆனால் மழை நின்ற பிறகும் மலர்கள்
நடுங்குவது போல் எனக்குள்... எனக்குள்
ஏன் இத்தனை அதிர்வுகள்?

நீ நிஜமா? இல்லை; நிலாவில் நான் கண்ட
கனவா?

எந்தக் கனவும் இரண்டு நிமிடங்களுக்கு மேல்
நீடிக்க முடியாது என்கிறார்களே...
நீயோ இரண்டு மணி நேரமாய்
நீடித்திருந்தாயே!

உன்னைக் காணவில்லை
ஆனால் —
நீ கனவில்லை; நிஜந்தான்.

உன்னை மீண்டும் காண்பேனா ஓவியா?

அப்படிச் சந்திக்க முடியாவிட்டால்
இப்படித்தான் விளம்பரம் கொடுக்க
வேண்டும்:

"காணவில்லை!

கண்டுபிடியுங்கள்!

பெயர்: மின்னல்."

உன்னோடு நேர்ந்த அனுபவத்துக்கு
என்னோடு என்ன அடையாளமிருக்கிறது?

இமைகள் உட்கார்ந்த கவடு
எங்கே இருக்கிறது கண்களில்?

என்ன ஆனது எனக்குள்?

ஒரேநாள் மழையில் ஏரி நிறைவது மாதிரி
உன் ஒரே பார்வையில் என் வெறுமை
நிறைந்து விட்டதே!

என் ஜன்னல்களைப் பெண்கள் உரசிப்
போனதுண்டு — மேகங்கள் மாதிரி

ஆனால், உரசிப் போன வேகத்தில்
உட்கார்ந்து மழைபெய்தவள் நீதானடி!

நான் ஒரு கூட்டுப்புழுவாய்த்தானிருந்தேன்.
இன்று கூட்டுக்குள் உன்னால்
குருட்சேத்திரம்.

உன்னை எதிர்த்து என் வாலிபம் வாதாடியிருக்கும்.
ஆனால், உன் அழகின் மின்னல்
என் கண்களைக் குருடாக்கி விட்டது.
உன் அறிவின் இடி என் நாவை
ஊமையாக்கி விட்டது.

டீச்சரின் முன்னால் மதிப்பெண்
குறைந்து வாங்கிய ஒரு மாணவன் போலவே
நான் மௌனமாகிவிட்டேன்.
ஆனால் என்னால் உன்னை ஜீரணிப்பது
சிரமம்.
உன் அறிவு ஒரு பலாப்பழம்.
உரிக்காமல் கொள்ள முடியாது; உரித்தால்
தள்ள முடியாது.

அது நனைந்து விட்டால் அதுவே பாரம்.

நெஞ்சின் பாரத்தால் —

சிறகு நனைந்த ஒரு பறவையாய் —
பறக்கவும் முடியாமல் நடக்கவும்
தெரியாமல் திருஞானம் டீக்கடை நோக்கிப்
போய்க் கொண்டிருந்தான்.



டீக்கடைகள் இந்த நாட்டின் சமத்துவக்
கூடங்கள்.

டீக்கடைகளின் கண்ணாடி தம்ளர்களில்
மட்டும்தான் ஜாதிகளும் சேர்த்துக்
கழுவப்பட்டுவிடுகின்றன.

எல்லோருக்கும் சமஸ்தானம் கொடுக்கும்
டீக்கடைகளின் நாற்காலிகள் இந்த நாட்டின்
பொதுவுடைமைச் சின்னங்கள்.

கொதிக்கும் அடுப்பில் குளிர்காய்ந்து
கொண்டே, சூடான தேநீர் நாவின்

# சிகரங்களை நோக்கி...

இந்தப் பகலெல்லாம் —

உன் நினைவுகளை அங்குலம் அங்குலமாக
அசைபோட்டுக் கொண்டேயிருக்கிறேன்.

உனக்குத் தெரியுமா...?
நேற்றைய மிச்ச ராத்திரியில் நிலா மேற்கில்
இறங்கும்வரை என் இமைகளும் கீழே
இறங்கவில்லை பெண்ணே.

இப்போது வானத்திலும் நெஞ்சிலும்
ஒரே மேகமூட்டம்.

உன் கருத்துக்களை என்னால் ஏற்க
முடியாது; ஆனால்உன் கண்களை என்னால்
மறக்க முடியாது.

உன்னை மீண்டும் சந்திக்காமலா போய்
விடுவேன்?

வானத்தில் எறியப்பட்ட கல்
விண்ணுக்கு வெளியே சென்று
விழுந்துவிட முடியுமா?

நீ பொசுக்கென்று புறப்பட்டு விட்டாலும்
இந்த பூமிக்கு வெளியே போய்விட
முடியுமா?

சந்திப்பேன்; நிச்சயம் சந்திப்பேன்.



சிறகுதான் பறவையின் பலம்.

நரம்புகளில் பரவ அந்தக் கசப்பான
இனிப்பை ருசித்துப் பாதிக் கண்கவிழ
தேநீரின் சூடு தொண்டைக்குள் இறங்குகிற
சுக நிமிஷங்களில்
எங்கள் ஏழைக் குடியானவர்களும்
தவணை முறையில் அத்வைதம்
அடைகிறார்கள்.



திருஞானம் டீக்கடையை நெருங்கிய போது—
வளைக்குள் தலைவிழுத்துக் கொள்ளும்
பாம்புகளைப் போல நான்கைந்து தலைகள்
மறையப் பார்த்தன.

அவர்களேதாம்!

அவனையும் நிலாவையும் அனாதையாய்
விட்டுவிட்டுப் போனவர்களேதாம்.



"வெளியே வாருங்கள் தோழர்களே!

நிலாவுக்கு அழைத்துப் போனவனை

**வைரமுத்து**

இருட்டில்
விட்டுவிட்டுப் போனவர்களே!''

வெளியே வாருங்கள்!''

அவர்கள் கங்காரு மடியின் குட்டிகளாய்
எட்டிப் பார்த்தார்கள்.

''ஏன்...? ஏன் அந்த நிலாவை நிராகரித்தீர்கள்?
சொல்லுங்கள்!
ஏன் அந்த ராத்திரியை ராஜினாமா செய்தீர்கள்?''

அவர்கள் தயங்கினார்கள்;
பிறகு சொட்டுச் சொட்டாய்ப் பேசினார்கள்.

''இல்லை! இல்லை! அந்தப் புதரில் ஒதுங்க வந்தவர்கள் எங்கள் உறவினர்கள்.
தற்கொலைப் பாறையில் எங்களைப் பார்த்தால்
கொலையே செய்து விடுவார்கள்.''

''நல்லவேளை நண்பர்களே! நானும் உயிரோடு வந்திருக்க மாட்டேன் — ஒவியா வந்து அழைத்திராவிட்டால்.''

''ஒவியாவா?
ஒவியாவா உங்களை அழைத்து வந்தாள்?''

தேசிய கீதத்தைக் கூடச் சேர்ந்து
பாடாதவர்கள்
இந்த வார்த்தைகளை ஒரே குரலில் உச்சரித்தார்கள்.

திருஞானம் வியந்தான்.

''ஏன்...? ஒவியாவை நீங்கள் பார்த்திருக்கிறீர்களா?''

அவர்கள் கோரஸில் சிரித்தார்கள்.

''இந்த ஊரில் ஒவியாவைப்
பார்க்காத கண்
நகக்கண் மட்டும்தான்; இந்த ஊரில்
ஒவியாவின் பெயரைக் கேளாத காது
ஊசியின்
காது மட்டும்தான்.

ஒவியா இந்த ஊரின் ஞான தேவதை!''

''அவளுக்குச் சொந்த ஊரே இந்த ஊரா?''

''இல்லை; இது அவள் வந்த ஊர்.

ஆனால், பூமியில் விழும் நட்சத்திரம்
வானத்தை
மறந்து போவது மாதிரி அவள்
தன் சொந்த ஊரை மறந்து விட்டாள்.''

''இங்கே எப்போது வந்தாள் அவள்?''

''பிளம்ஸ் மரங்கள் துளிர்விடும் ஒரு வசந்த மாதத்தில் — உணர்ச்சிகளைத் தாடிக்குள்

---

## மாதம் ஒரு தொகுதி



### திருநாவலூர்த் தொகுதியை ஆய்வு செய்ய வருகிறோம்!

ஒவ்வொரு மாதமும் ஒவ்வொரு தொகுதிக்குச் சென்று, அத்தொகுதி எம்.எல்.ஏ. மக்களுக்காக என்னென்ன செய்கிறார் என்பதை ஒவ்வொரு மாதமும் கல்கியில் எழுதி வருவதை அனைவரும் அறிவீர்கள்.

அந்த வரிசையில் நடந்த பதினோராவது குலுக்கலில் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள தொகுதி தென்னார்காடு மாவட்டத்திலுள்ள திருநாவலூர்த் தொகுதி. இத்தொகுதியில் ஜெ. அணி வேட்பாளரை விட 17,250 வாக்குகள் அதிகம் பெற்று வெற்றி பெற்றிருப்பவர் தி. மு. க. வைச் சேர்ந்த ஏ. வி. பாலசுப்பிரமணியன்.

இவர் வெற்றி பெற்று எம். எல். ஏ. ஆன பிறகு தொகுதி மக்களுக்கு என்ன செய்திருக்கிறார்? கொடுத்த வாக்குறுதிகள் என்னவாயின? தொகுதி மக்களாகிய நீங்கள் அவரிடம் காணும் குறை—நிறைகள் என்ன?

எல்லாவற்றையும் சுருக்கமாக எங்களுக்கு எழுதியனுப்புங்கள். நாங்கள் நேரடியாகத் திருநாவலூர்த் தொகுதிக்கு வந்து, பலரையும் சந்தித்துக் குறை — நிறைகளை அலசுகிறோம். தொகுதி மக்களாகிய உங்கள் எதிர்பார்ப்புகளையெல்லாம், எம்.எல்.ஏ.வான ஏ. வி. பாலசுப்பிரமணியனிடம் எடுத்துச் சொல்கிறோம். கூடவே உங்கள் ஆதங்கங்களையும் சொல்கிறோம். எல்லாவற்றுக்கும் அவரிடமிருந்து பதில்களை வாங்கிப் பிரசுரிக்கிறோம்.

உங்கள் கடிதங்கள் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசித் தேதி: 22.12.90.

கடைசித் தேதிக்காகக் காத்திருக்க வேண்டாம். உறையின் மேல், 'மாதம் ஒரு தொகுதி' என்று குறிப்பிட்டு உடனடியாக எழுதியனுப்புங்கள்.

— ஆசிரியர்.

புதைத்துக்
கொண்ட தன் தந்தையை அழைத்துக் கொண்டு, பூமியில் நடந்தாலும் தடம் பதிக்காத ஒரு மெல்லிய மேகமாய் ஓசையில்லாமல் இங்கே வந்தாள் ஒவியா. உச்சிப்பாறையருகே, இந்த ஊரோடு கோபித்துக் கொண்டு ஒதுங்கி நிற்பதுபோல் நிற்கும் அந்த ஒற்றை பங்களாவில் குடியேறினாள். அவள் வந்த பிறகுதான் இந்த ஊரில் மூன்று மாதம் மட்டுமே இருந்துவந்த வசந்தம் முழுக்க இருக்கச் சம்மதித்தது.

இந்த ஊரை எக்ஸ்-ரே கண்களால் வாசித்தாள்.

உழைப்பாளிகளின் வாழ்க்கையை ஊடுருவினாள்.

இங்கே மனிதர்களுக்கு ஒரு வாழ்க்கை மறுக்கப்பட்டிருக்கிறது என்று துப்பறிந்து துயரம் கொண்டாள்.

'ஆறு மணிக்குமேல் விளக்கேற்றிக் கொள்கிறவர்களே! உங்கள் பகல் இருண்டு கிடக்கிறதே! பரவாயில்லையா' என்று கேட்டாள்.

அவர்களை நோக்கி வரவேண்டிய வாழ்க்கை நதி
எங்கெங்கே தடுக்கப்பட்டிருக்கிறது என்று தகவல் சொன்னாள்.

இரவில் பாமரர்க்கு எழுத்தறிவூட்டினாள்.

மூளையிலிருந்து மூட நம்பிக்கைகளின் முள்ளெடுத்தாள்.

மனிதன் கண்ணீரை ஆனந்தத்திற்காக மட்டுமே சிந்தவேண்டும் என்று அறிவுறுத்தினாள்.

என்னைப் போன்ற இளைஞர்கள் அவளைப் 'பெண்பால் சூரியன்' என்று பேசினோம். அவளுக்கு முன்னாலும் இந்த ஊரில் மழை பெய்தது; அப்போதெல்லாம் மேகம் கிளிசரின் போட்டு அழுவதாகவே எங்களுக்குப் பட்டது.

இவள் வந்த பிறகும் மழை
பெய்கிறது; இது தாய்ப்பால் சுரப்பது மாதிரி இயல்பாக இருக்கிறது.

ஊரே அவளை வணங்குகிறது.''

''அவ்வளவு மதிப்பா அவளுக்கு...?'' திருஞானம் திகைத்தான்.

ஆமாம். இப்போது இங்கே —
மாதா — பிதா — குரு — தெய்வம் — இல்லை;
மாதா — பிதா — ஒவியா — தெய்வம்.

— இன்னும் சொல்வேன்

## அடுத்த இதழில்...

- வேகமாகப் பரவும் டிப்தீரியா ஜுரம்
  — ஓர் ஆய்வு

- இசையுலகின் இரு சிகரங்கள்





## நவம்பர் 15 இல் நாட்டின் நிலை என்ன? — போட்டி முடிவு!



ஏராளமாகக் குவிந்துவிட்ட கூப்பன்களைக் கவனமாகப் பரிசீலனை செய்ததில் ஒன்பது விடைகளையும் சரியாக எழுதியவர் யாரும் இல்லை. எட்டு விடைகளைச் சரியாகக் கணித்துப் பரிசுத் தொகையைப் (ரூ. 250) பகிர்ந்து கொள்பவர்கள் ஐந்து பேர். முடிவுதேதிக்குப் பின்னர்வந்த ஆயிரக்கணக்கான கூப்பன்கள் பரிசீலனைக்கு ஏற்கப்படவில்லை. பரிசு பெறுவோர்:

1. எஸ். ஆனந்தன் A/5—1, DAE காலனி, ECIL சாலை, ஹைதராபாத் — 500 762.

2. அ. சண்முகசுந்தரம், 37, நேரு தெரு, சிட்லபாக்கம், சென்னை — 64.

3. இ. ரவிகுமார், 7, மதுரை சாமி மடம், கிழக்குத் தெரு, செம்பியம், சென்னை — 600 011.

4. ஏ எல். சொக்கலிங்கம், 13/20, திரு நகர், வில்லிவாக்கம், சென்னை — 600 049.

5. வி. பாண்டியன், ஸ்பிக் லிட்., 5 வது மாடி, 97, மவுண்ட் ரோடு, கிண்டி, சென்னை — 600 032.

* புறக்கணிப்பு...



நீங்கள் கேட்டவை — தராசு

# 'போஃபோர்ஸ் விசாரணை தொடரும்' என்கிறாரே பிரதமர்?


* புரிந்து கொண்டார்

* கே. பக்தவத்சலம், விருத்தாசலம்.

? சந்திரசேகரின் பலம் என்ன? பலவீனம் என்ன?

! நீண்ட கால அரசியல் அனுபவம் காரணமாக நாட்டில் உள்ள பிரச்னைகளை நன்றாக அறிந்து வைத்திருப்பது பலம். ஆனால் அவற்றைத் தீர்க்க நல்ல கொள்கைகள் இல்லாதது பலவீனம்.

* குரு கிருஷ்ணா, திருச்சி.*

? வி.பி.சிங் ஆட்சியைக் கவிழ்க்க ஐம்பது கோடி செலவாமே?

! நம் நாட்டில் உள்ள பண மூட்டைகளுக்கு இது ஒன்றும் பெரிய விஷயம் அல்ல. சந்திரசேகரின் பதவிக் காலம் முடிவதற்குள்ளேயே இந்தப் பண முதலைகள் போட்ட முதலுக்கு அதிகமாகவே அறுவடை செய்து விடுவார்கள்!

* என். முருகேஷ், பெருஞ்சேரி.

? இரண்டு முறை தேசிய விருது பெற்றும் அர்ச்சனா போன்றவர்களைத் தமிழ்த் திரையுலகம் புறக்கணிப்பது ஏன்?

! இங்கு பாலு மகேந்திரா போன்றவர்கள் குறைவான எண்ணிக்கையில் இருப்பது தான் காரணம்.

> * ரூ. 20 பரிசு பெறுபவர்:
>
> குரு கிருஷ்ணா,
> 32, நடுத்தெரு,
> வரகநேரி, திருச்சி — 8.

* சந்தனப்ரியன், சித்தோடு.

? சந்திரசேகர் தாக்குப் பிடிப்பாரா?

! அது தாங்குகிறவர்களைப் பொறுத்தது.

* ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

? கூட்டு மந்திரிசபை அமைத்தால் என்ன?

! தேசிய முன்னணி அரசு என்பது கூட்டு மந்திரிசபை அல்லாது வேறு என்ன; கவிழ்த்து விட்டார்களே!

* என். ஆர். சுப்பிரமணியன், பூனாம் பாளையம்.

? சந்திரசேகர் மீது வெறுப்பு இருந்தால் அதை ஜனாதிபதியைத் தலையங்கத்தில் கண்டிப்பதன் வாயிலாகக் காட்டலாமா, கல்கி?

! முதலாவது, நமக்குச் சந்திரசேகர் மீது வெறுப்பு கிடையாது. அவரும் அவரைச் சேர்ந்தவர்களும் ஆட்சியைக் கவிழ்த்த முறை மீதுதான் வெறுப்பு. வி. பி. சிங் மீது நமக்கு விசேஷ விருப்பு ஒன்றும் கிடையாது. அவர் செய்த தவறுகளும் அதே தலையங்கத்தில் சுட்டிக்காட்டப்பட்டுள்ளன. ஆனால் அவரது அமைச்சரவை கவிழ்க்கப்பட்ட விதத்தில் எமக்கு ரொம்ப ரொம்ப வெறுப்பு. இனி இரண்டாவது விஷயம். கவனமாகப் படித்துப் பார்த்தால் நாம் ஜனாதிபதியைக் குறை கூறவில்லை என்றும் இப்படி நடந்து கொள்ள வேண்டிய திர்ப்பந்தத்தை அவருக்கு ஏற்படுத்தி விட்ட ராஜீவின் சதிச் செயலைத்தான் கண்டித்திருக்கிறோம் என்றும் தெளிவாகும். சுருக்கமாக எழுதப்படும் தலையங்கத்தின் ஒவ்வொரு வரியும் வார்த்தையும் முக்கியம். கருத்தூன்றிப் படிக்க வேண்டும்.

* ஏ. எம். சர்தார், விருத்தாசலம்.

? சூழ்நிலைக் கைதிகள் என்றால் என்ன?

! ஸத்தாம் குவெய்த்தை ஆக்கிரமிக்கப் போக, நீங்களும் நானும் இங்கே பெட்ரோலுக்குக் கூடுதல் விலை கொடுத்து அவதிப்பட வேண்டியிருக்கிறதே, அதுதான்.

* தெ. கருணாநிதி, மருதூர் தெற்கு.

? அரசியலில் 'கழுத்தறுப்பு, காலை வாரி விடுதல்' இரண்டுக்கும் உதாரணம் கூறுக?

! கழுத்தறுப்பு: தேவிலாலிடம் வி. பி. சிங் அனுபவித்தது: தேவிலாலிடம் சந்திரசேகர் அனுபவித்துக் கொண்டிருப்பது. காலை வாரி விடுதல்: பி. ஜே. பி. யிடம் வி. பி. சிங் அனுபவித்தது: காங்கிரசிடம் சந்திரசேகர் அனுபவிக்கப் போவது.

* எஸ். செல்வம், மறைமலை நகர்.

? உலகக் கோப்பைக் குத்துச் சண்டையில் இந்திய வீரர்கள் அரை இறுதியில் சுருண்டது பற்றி?

! அரை இறுதி வரை வந்ததே வியப்பு என்பதால் அங்கு சுருண்டது திகைப்பளிக்க வில்லை.

* எல். மாறன், மேல்பட்டி.

? தில்லியில் 144 தடைச் சட்டம் அமலில் இருக்கும் போது, 'தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு சரியில்லை' என்று பதவி ஏற்றதிலிருந்து புதுப் பிரதமர் புலம்புகிறாரே, ஏன்?

! 'ஜெ' கட்சி உறுப்பினர்களின் ஆதரவை நாடாளுமன்றத்தில் பெறவேண்டுமே, அதற்காகத்தான்.

* அ. ராணி, பம்மல்.

? ருஷ்ய நகரங்களில் ரேஷன் முறையில் உணவுப்பண்டங்கள்வழங்கப்படுவதுஏன்? அங்கு நிலவும் உணவு நெருக்கடிக்கு என்ன காரணம்?

! சோஷலிஸக் கொள்கைகள்தான். கறிக்கு உதவாத ஏட்டுச் சுரைக்காய் அது என்பதை இப்போது கோர்பசேவ் புரிந்து கொண்டிருப்பதால் மகத்தான மாற்றங்களைச் செய்து வருகிறார். பலன் தரச் சில காலம் ஆகும். இங்கேயோ நாம்பழம்பெரும் சோஷலிஸ வாதியிடம் ஆட்சியைப் பறி கொடுத்து விட்டிருக்கிறோம்!

* முஸ்தபா கமால், தக்கோலம்.

? 'போஃபர்ஸ் பற்றி விசாரணை தொடரும்' என்ற சந்திரசேகர் பேச்சு குறித்து...?

! தொடரும், தொடரும். ஏன் தொடராது? ராஜீவ் காந்தி ஆட்சியிலேயே விசாரணை தொடரத்தானே செய்தது!

* ஆர். சுப்பராவ், திருக்கோவலூர்.

? வி. பி. சிங், தமது பதவி நாற்காலி பறி போனதைத் 'தியாகம்' என்று விளக்கம் தருகிறாரே, ஏற்க வேண்டியதுதானா?

! 'கொள்கைகளை விட்டுக் கொடுக்கத் தயாராக இருந்திருந்தால் பி. ஜே. பி. யின் ஆதரவைச் சுலபமாகத் தக்கவைத்துக் கொண்டிருக்கமுடியும். அப்படிநான்நடந்து கொள்ள விரும்பவில்லை' என்று அவர் கூறுவதைவைத்துப்பார்த்தால், கொள்கைக்காகப் பதவி, தியாகம் செய்யப்பட்டதாக ஏற்கத்தான் வேண்டியிருக்கிறது.

* மு. வேங்கடராமன், தக்கோலம்.

? கல்கி வார இதழ் கண்டதும் உடனே மற்றவர்களிடம் கடனாவது வாங்கிப் படிக்கத் தோன்றுகிறது. காரணம்?

! கெடுத்தீரே, காரியத்தை! கல்கியைக் கடன் வாங்கிப் படிக்காதீர்கள். கடன் பெற்றாவது கல்கி வாங்கிப் படியுங்கள்.

* நல்லாலம் காசிதாசன், கீழ் கொளவேடு.

? பீகார் முதல்வர் ராஜீவை பஸ் கண்டக்டராகவும், சந்திரசேகரை டிரைவராகவும் வர்ணித்திருக்கிறாரே?

! டீசல் இல்லை என்பதைக் குறிப்பிட மறந்து விட்டார்.

* எஸ். கே. மூர்த்தி, கும்பகோணம்.

? பெட்ரோல், டீசல் விலை இனி குறையுமா?

! குறையாது. விடுமுறை நாட்களில் வாகனங்களை எடுக்க வேண்டாம் என்ற பிரபலஸ்தர்களின் கோரிக்கையும், விடுமுறை தினங்களில் பஸ்களின் எண்ணிக்கையைக் குறைப்பது என்ற அரசின் முடிவும் சரியே என்றாலும், பிரச்னையைச் சமாளிக்கச் சொற்ப அளவிலேயே உதவும்.



* 'தியாகம்'



* பலம்? பலவீனம்?



* தொடர்ந்த விசாரணை



* 'கழுத்தறுப்பு'







## டாக்டர் பதில்கள்:

# புத்திசாலித்தனம் பிறவியிலேயே நிர்ணயிக்கப் படுகிறதா?

**● பி. ஜானகி, பாளையங் கோட்டை — 2:**

**சாப்பாட்டில் கல் இருப்பதால்தான் சிறுநீர்க் குழாய் அடைத்துக் கொள்கிறது என்கிறார்கள். 'இந்தக் 'கல்' என்பது சாப்பாட்டில் உள்ள கல்லா? இல்லை, 'கல்' என்பது ஒரு வகை வியாதியா?**

●

**●● டாக்டர் சந்திரசேகர சாண்டில்யா — சென்னை:**

சிறு நீர்க் குழாயில் கல் என்பது, சாப்பாட்டில் உட்கொள்ளும் கல் அல்ல. சிறுநீரில் உள்ள கழிவுப் பொருட்கள் உறைந்து போவதால் உருவாவதுதான் இந்தக் கற்கள். உடம்பில் உள்ள மொத்த நீர் குறைவதாலோ, சிறுநீரில் உள்ள உப்புச் சத்துக் கூடுவதாலோ, சிறுநீர்க் குழாயில் அடைப்பு, சுருக்கம், நெளிவுகள் உண்டாவதாலோ, இந்தக் கற்கள் உருவாகலாம். மேலும், சிறுநீரகத்தைக் கிருமிகளோ, நுண்கிருமிகளோ தாக்குவதால் யூரினரி இன்ஃபெக்ஷன் உண்டாகி, இக் கற்கள் உருவாகின்றன. இந்தக் கற்களை அறுவைச் சிகிச்சை மூலமோ, லிதோ டிரிப்சி இயந்திர முறை மூலமோ நீக்கிவிடலாம்.

**● எஸ். ராதா, சென்னை — 33:**

**மூளையின் சக்தி எப்படிப்பட்டது? ஒரே வகுப்பில் படிக்கும் கோபு மந்தமாக இருப்பதற்கும், பாபு புத்திசாலியாய் இருப்பதற்கும் காரணம் என்ன? உருவமும், குணமும் குரோமோசோம்களால் வேறுபடுவதைப் போல, மூளையின் சக்தி இயற்கையாய் ஒவ்வொருவருக்கும் வேறுபடுகிறதா? வயதானால் வெளி உருவில் ஏற்படும் மாற்றத்தைப் போல, மூளையில் என்ன மாற்றம் நிகழ்கிறது?**

புத்திசாலித்தனம் வளர்வதற்கு, கூர்ந்து கவனித்தல், கிரகிப்புச் சக்தி, திரும்பத் திரும்ப நினைவுபடுத்திப் பார்த்தல் என்று மூன்று செயல்கள்தான் காரணமாக இருக்கின்றனவே தவிர, பிறப்பாலோ, ஜெனடிக்ஸ் அல்லது குரோமோசோம்களாலோ நிர்ணயிக்கப்படுவதல்ல. பாபுவைப் போல் கோபுவும் கவனித்து, கிரகித்து, உழைத்துப் படித்தால் கண்டிப்பாக அவன் மூளையின் சக்தியும் வளரும். மேலும் சூழ்நிலை, பயிற்சி ஆகியவையினால் புத்திசாலித்தனம் கட்டாயம் கூர்மையாகும். வயதானால் வெளி உருவில் ஏற்படும் மாற்றத்தைப் போல் மூளையிலும் **(Grey matter)** சிறு அளவுக்கு அழிவு ஏற்படும். இந்த நிலையை **Senile Dementia** என்பார்கள். அதனால்தான் ஞாபக மறதி, சுறு சுறுப்புக் குறைவு, ஆகியவை வயதானோருக்கு ஏற்படுகின்றன.

தொகுப்பு: **எஸ். வி. என்.**

---

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர்: டி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/; விமானத் தபால் ரூ. 350/-.

புதிய

# மோத்தி ஸாண்டல் சோப்பு

MOTI
LUXURY BATH SOAP
SANDAL

உங்களுக்காக . . .
உங்கள் மேனி
எழிலுக்காக
மோத்தியில் நிறைந்
திருக்கு-சந்தன குணம்
மோத்தியில் மணக்குது
சந்தனம்... சந்தனம்.

மேனி
எழிலின்
பிரதிபலிப்பு

டாடா தயாரிப்பு

CLARION/B/T/47/203 TML

இந்து.

மகிழ்ச்சி

வாழ்வின்
வியக்க வைக்கும் வண்ணங்கள்,
நினைக்க வைக்கும் தருணங்கள்.
இந்து கலர் பிலிமில்
இவற்றை பதித்திடுவீர்,
எண்ணங்களில் என்றென்றும்
நிலைத்திடச் செய்திடுவீர்.




இந்துஸ்தான் போட்டோ பிலிம்ஸ்
மான்யுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்
(ஒரு இந்திய அரசு நிறுவனம்)
இந்து நகர், உதகமண்டலம் 643 005.
வர்த்தகத் தலைமையகம்: பாரி டவர்ஸ்
1, அப்துல் ரசாக் தெரு, சைதாப்பேட்டை,
சென்னை 600 015.

